குடும்பத்தினர் அனைவரும்
திட ஆரோக்கியத்துடன் திகழ
:.பாஸ்:.போமின்





:.பாஸ்:.போமின்

- சக்தியை அதிகரிக்கிறது
- பசியைத் தூண்டுகிறது
- வலிவைப் பெருக்குகிறது
- நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுகிறது.






SQUIBB® TIT®

SARABHAI CHEMICALS

ஜெ. ஆர் ஸ்க்விப் & ஸன்ஸ் இன்-கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்காகும். சரம் சந்த் ப்ரேம் சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

:.பாஸ்:.போமின்...
பழரஸ மணம் கமழும்
பச்சை நிற விடமின்
டானிக்.

Chlipl HPMA-35A/70 Tam

# ஆறு கைகள் இருந்தாலும் போறாது போலிருக்கே!

## ஒரு Prestige பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் வாங்கிவிடுங்கள்!




பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் உங்கள் பொன்னான சமையல் நேரத்தில் ஒருமணி மிச்சமாக்குகிறது

சமையல் பிரச்சனையை எளிதாக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர். பிரஸ்டிஜ் சமையல் வழக்கமான சமையலுக்காகும் நேரத்தில் கால்பங்கு நேரத்திலே தயார். அது எளிதானது. அத்துடன் பத்திரமானதும்கூட. 12 வயது சிறுமி கூட கையாளலாம். எரிபொருள் செலவில் எத்தனையோ மிச்சம். பிரஸ்டிஜ் இருந்துவிட்டால் சமைக்கும்போது குழப்பமோ, தடுமாற்றமோ இருக்காது. ஏனெனில் அதில் ஒரே சமயத்தில் மூன்றுவகை சமைக்கலாம். பிரஸ்டிஜில் தயாரான உணவில் சத்து, ருசி, மணம் முதலியவை குறைவதில்லை. பிரஸ்டிஜ் ஆயுட்கால உத்தரவாதம்கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்பும் பராமரிப்புக்கு வசதியுள்ள பிரஷர்குக்கர் பிரஸ்டிஜ் ஒன்றே.

பிரஸ்டிஜ் ஐந்து அளவுகளில் உள்ளன. உங்கள் குடும்பத்திற்கு தேவையான அளவை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.




டி.(பிரைவேட்) லிமிடெட், பெங்களூர்-16.

பளிச்சிடும் செய்தி!

# புதிய ஃபோமெக்ஸ்

உன்னத-
மான
க்ளீனிங்
பவுடர்

**அதிக சக்தி மிக்கது!**
ஃபோமெக்ஸ் துரிதமாகச் சுத்தப்படுத்து-கிறது. பாத்திரங்களும், கப்-சாஸர் முதலியவையும், தரைகளும் உண்மையில் சுத்தமாகப் பளிச்சிடுகின்றன!

**அதிக மதிப்பு!**
விலையைப்பாருங்கள்! சிறந்த அதிக சக்தியுள்ள பவுடருக்கு எவ்வளவு குறைவான விலை!

**அதிக பவுடர்!**
எடையைப் பாருங்கள்! உங்களுக்கு ஒவ்-வொரு ஃபோமெக்ஸ் பேக்கிலும் எவ்வளவு அதிகமான க்ளீனிங் பவுடர் கிடைக்கிறது!

## அதிக பயனைத் தருவது




பிரகாஷ் அஸிடெம் தயாரிப்பு • விநியோகஸ்தர்கள்: ராலிஸ் இந்தியா லிமிடெட்.

# இயற்கையான அழகுடன் திகழ



## ஆஷா

### அழகு சாதனங்கள்






புதிய முறையில் தயாரிக்கப்பட்ட ஆஷா முகப்பவுடர் உங்கள் வதனத்தின் இயற்கைப் பொலிவைப் பரிமளிக்கச் செய்வதுடன், மணிக்கணக்கில் நீடித்திருக்கும் மென்மைமிகு பிரகாசத்தை உங்கள் சருமத்திற்கு அளிக்கிறது.
இயற்கை, ராசேல், பீச், வெள்ளை, ஆகிய நான்கு கோலாகலமான வர்ணங்களிலிருந்து, உங்கள் வதனத்திற்கு இணைந்துள்ளதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.
உங்கள் சருமத்தை இளமைப் பொலிவுடனும், மழமழப்பாகவும், துல்லியமாகவும் வைத்திருக்க ஆஷா வானிஷிங் கிரீம் உபயோகியுங்கள்.
இயற்கையான அழகு பொலிவ இது மிகச் சிறந்த பவுடர் தளம்.
ஆஷா காஜல் (கண்மை) உங்கள் கவர்ச்சிக்கண்களுக்குக் குளுமை தந்து, சோர்வைப் போக்குகிறது.
உங்களுடைய ஒப்பனைக்கு முழுமை தர, ஆஷா சாந்து உபயோகியுங்கள். மூன்று வெவ்வேறு வர்ணங்களில் நீர்மமாகவோ, பசையாகவோ கிடைக்கிறது.

# கடுமையான ஜலதோஷத்திலிருந்து விரைவில் குணமடைந்தேன்!



# அமிர்தாஞ்சனம்

**மிக உதவியது**




அமிர்தாஞ்சனம் ஜலதோஷம், தலைவலி, சுளுக்கு தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டு வரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.

*10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி*

AM-5989

**அமிர்தாஞ்சன் லிமிடெட்**

# கல்கி  பொருளடக்கம்

## ராஜாஜி மலர்

சாதாரண, கார்த்திகை 21 :: 1970 டிசம்பர் 6





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை(இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

மிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்





# இமயச் சிகரத்துக்கு இன்னுமோர் ஆண்டு!

'தர்ம ஜயந்தி' விரைவில் வருகிறது! ராஜாஜி தொண்ணூற்று மூன்றாவது பிராயத்தில் பிரவேசிக்கிறார்.

சாமானிய மக்களான நாம் ஒவ்வொரு பிறந்த தினத்தின் போதும் நம் வாழ்வுக்கு இன்னொரு வயதைக் கூட்டிக் கொள்கிறோம். அருள் பெற்ற மகனீயர்களோ தங்கள் பிறந்த தினத்தின்போது வயதுக்கே வாழ்வினை ஊட்டி விடுகிறார்கள். பலமும் நலமும்இழந்த 'தொண்ணூற்று மூன்று' என்ற வயதுக்கு வாலிபத்தின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டுகிறார் ராஜாஜி.

இன்று அரசியலிலும் பொருளாதாரத்திலும் மட்டுமின்றி ஆன்மிகத்திலும் இருளில் ஆழ்ந்து வரும் நம் நாட்டுக்கு ராஜாஜி ஒரு கலங்கரை விளக்கம்!

எடுத்த எடுப்பில் மக்களின் மனத்தை மயக்கும் சித்தாந்தங்களைக் கோஷிப்பவர்கள் எளிதில் 'வெற்றி' பெற்று விடுகிறார்கள். ராஜாஜி இத்தகைய 'வெற்றி'யைச் சொப்பனத்திலும் எண்ணிப் பார்த்தவரல்லர். எது மக்களுக்குப் பிரியமானது என்று பார்ப்பதைவிட, எது மக்களுக்கு நன்மை தருவது என்றே பார்ப்பவர் அவர். மாறிக் கொண்டே இருக்கும் இந்த உலகில் நிரந்தர தர்மங்களும் உண்டு; மாறுதல் வேண்டிய நியதிகளும் உண்டு. நேர்மை, வாய்மை, அன்பு ஆகிய நிரந்தர தர்மங்களில் நிலை கொண்டுவிட்ட ராஜாஜி, மக்களின் நலனையொட்டி மாறுதல் வேண்டிய இனங்களில் மாற்றங்களையும் துணிந்து செய்கிறார். தருமமே நல்லாட்சியின் அஸ்திவாரம் என்ற முடிந்த முடிவான கருத்துடன் அரசியலைத் தூய்மை செய்து வருகிறார். ஜனநாயகம் என்பது பெருவாரியின் பௌதிக பலத்தை மட்டும் பொறுத்ததல்ல; **அனைவரின்** ஆத்ம பலத்தையுமே சார்ந்தது என்ற முற்றுணர்வுடன், சிறுபான்மையினரின் நியாயமான நலன்களுக்காகவும் போராடுகிறார்.

தனிமனிதர் ஒவ்வொருவரின் சிறப்புப் பண்பும் பூரணமாகப் பொலிந்து அதன் விளைவாகத் தேசம் முழுதும் சுபிட்சம் காண வேண்டும் என்ற உணர்வில் நிலைத்து நிற்கிறார்.

அவரைச் சரியாகப் புரிந்துகொள்ளாதவர்கள், அல்லது வேண்டுமென்றே சுயநலனுக்காக அவரைச் சரியாகப் புரிந்துகொள்ள மறுப்பவர்கள் அவரை எதிர்க்கிறார்கள். அவரோ எதிர்ப்புக் கணைகள் எட்டாத் தொலைவில் நின்று பணி புரிகிறார். எந்தக் கருமேகமும் தொட முடியாத ஹிமாலயப் பனிமுடியாக அவர் பரம நிர்மலமாக, மகோன்னதமாக வாழ்ந்து வருகிறார்.

ஆனால் அந்தப் பனிமுடி பணி ஏதும் இன்றி மௌனமாக இருந்துவிடவில்லை. ஆண்டவன் என்கிற சூரிய தேவனுக்குத் தன் வெண்மையை அப்படியே திறந்து காட்டிக் கொண்டிருக்கிறது. ஆண்டவனின் அருட் கிரணங்கள் அந்தச் சிகரத்தை அனவரதமும் உருக்கிக் கொண்டேயிருக்கின்றன. சிகரம் உருகி, உருகி உலகில் அயராத பல புனிதப் பணிகளை ஆறுகளாகப் பாய்ச்சி வருகிறது. கங்கையாகப் பாய்கிறது ராஜாஜியின் ஆன்மிகப் பணி; யமுனையாகப் பாய்கிறது அவரது இலக்கியப் பணி; சிந்துவாகப் பாய்கிறது அவருடைய அரசியல் பணி. அவை தோன்றுமிடத்தில் இம்மூன்றும் ஒன்றேதான்— ஆண்டவனிடம் சரணாகதி செய்து, தன்னை அப்படியே உருக்கிக் கொண்டு விட்டால் அப்புறம் அரசியல், ஆன்மிகம், இலக்கியம் எல்லாம் ஒன்றே தான். ராஜாஜியின் பெருமை இதில் தான் இருக்கிறது. அறிவுக் கூர்மையிலும், வினைத் திட்பத்திலும் ராஜாஜிக்குச் சமமான வேறு உலகத் தலைவர்கள் இருந்திருக்கலாம். ஆனால் அவரைப் போல் பக்தி உள்ளம் படைத்த ஒருவர் இருந்திருக்க முடியுமா என்பது சந்தேகமே. அறிவுச் சக்தி அபரிமிதமாக இருக்கும் போது பக்தியில் ஈடுபாடு இராது; பக்தி பெருகும் போது கர்மத்தில் நாட்டம் இராது என்பார்கள். ஆனால் இந்தக் கூற்றுக்களை அடியோடு பொய்யாக்கி, மெய்யான பெருவாழ்வு வாழ்ந்து காட்டுகிறார் ராஜாஜி. அந்தப் பெரு வாழ்வில் மற்றொரு மைல் கல் தான் தொண்ணூற்று மூன்று என்பது. வாழி வாழி வாழியவே ராஜாஜி!

# ராஜாஜியின் கருத்துக்கள்

நாள்தோறும் பரவி வளர்ந்து வருகின்ற கம்யூனிஸ அபாயத்தைத் தடுத்து நிறுத்தாமல் பலவீனமான கொள்கையைக் கையாண்டு வரும் சர்க்காரைக் கண்டித்து 'ஹிந்து'ப் பத்திரிகை பின்வருமாறு எழுதியிருப்பது பாராட்டுக்குரியது:

> போலீஸார் தீவிரமான நடவடிக்கைகள் மேற்கொண்ட போதிலும் மேற்கு வங்காளத்தில் நாளுக்கு நாள் நிலைமை மோசமாகி வருகிறது. மிருகத்தனமான நக்ஸல் பாரித் தாக்குதலுக்குப் போலீசாரே ஆளாகி வருகின்றனர். அதோடு இப்போது நகரத்திலேயே 'கெரில்லா'ப் போர் முறையைக் கையாளும் நக்ஸல் பாரிகளின் துப்பாக்கிகளுக்கும், கத்திகளுக்கும் அரசாங்க உயர் அதிகாரிகளும் இரையாகி வருகிறார்கள். இந்த வன்முறைகளின் நோக்கம் வெளிப்படை. தெருச் சுவர்களில் எல்லாம் ஒட்டப்பட்டுள்ள மா—சே—துங் போஸ்டர்கள் இந்த நோக்கத்தைப் பறையறிவிக்கின்றன. சட்டப்படி சர்க்கார் நடக்க முடியாதபடி நெறிச் சிதைவை உண்டாக்கி, புரட்சியைத் தூண்டி விடுவதே அந்நோக்கம். இவ்விஷயத்தை ஏதோ சில நூறு இளைஞர்களின் மனக் கோளாற்றில் எழுந்த செயல் என்றும், போலீசுக்குச் சில விசேஷ அதிகாரம் தருவதால் இதைச் சமாளித்து விடலாம் என்றும் கருதுவது பயங்கரமான தவறு.

என் அபிப்பிராயத்தில் முதல் நடவடிக்கையாகச் செய்ய வேண்டியது, எல்லாக் கம்யூனிஸ்ட் கட்சிகளையும் தடை செய்வதுதான். கம்யூனிஸ்ட்களிடை தாற்காலிகமாக உள்ள பிரிவுகளைப் பொருட்படுத்தாமல் அவை அனைத்தையுமே தடை செய்ய வேண்டும்.

இருபதாண்டுகளுக்கு முன் மக்கள் ஏற்ற அரசியல் சாஸனத்தின் இதயமான கொள்கை பிரஜைகளுக்குப் பல அடிப்படைச் சுதந்திரங்களை உறுதி கூறியதேயாகும். இந்தச் சாஸனத்தின் இயற்கையையும் இலட்சணத்தையும் அடியோடு மாற்றி யதேச்சாதிகாரத்தை ஆட்சி முறையாக்கப் பார்க்கிறவர்களும் நாட்டில் இருக்கிறார்கள்! இப்படிப்பட்ட கோஷ்டிகளின் எதிர்ப்பு எவ்வளவு கடுமையாக இருப்பினும் இந்திய மக்கள் மொத்தத்தில் கம்யூனிஸ்ட்களைத் தடை செய்வதைப் பூரணமாக ஆதரிக்கவே செய்வர்.

*

மேற்கு வங்காளத்திலிருந்து வரும் செய்திகளைப் பார்க்கும்போது, அங்கு சில இடங்களிலாவது மக்கள் சர்க்காரின் பலவீனக் கொள்கையில் சலிப்படைந்து, நக்ஸலைட்களிடமிருந்து தங்களைக் காத்துக் கொண்டு சுதந்திரத்தையும் பந்தோபஸ்தையும் பெறுவதில் தாங்களே நேரடிப் பொறுப்பு எடுத்துக் கொண்டு விட்டதாகத் தோன்றுகிறது. நக்ஸலைட்டுகளுக்கு இன்னமும் உள் நாட்டுக் கெரில்லா யுத்தம் தொடங்குவதற்குத் தேவைப்படும் பயிற்சியோ, ஆயுத வசதியோ பூரணமாக இல்லை. எனவே இந்தத் தவறான வழியில் செல்லும் நக்ஸலைட்களைவிட, மக்களுக்கு அதிக சக்தி இருக்கவே செய்கிறது. ஆனால் இன்னமும் காலம் தாழ்த்திக் கொண்டே போனால், கெரில்லாக்களுக்குப் பயிற்சியும் தளவாடமும் கிடைத்துவிடும். அப்போது, அச் சிறுபான்மையினரே ஜனத்தொகை முழுவதையும் வன்முறையின் கீழ் கொண்டுவந்து விட முடியும்.

*

பிரிட்டனுக்காகப் போரிட்டு க்விபெக்கை வெற்றி கொண்ட வுல்ஃப், அப்போரிலேயே மாண்டு போனார். பிரெஞ்சு, ஸ்பானிஷ் கடற் படைகளை டிரஃபால்கரில் நெல்ஸன் தோல்வியுறச் செய்து, தம் இன்னுயிரையே விட்டார். இவர்கள் போராட்டத்துக்காகப் பிராணத் தியாகத்தையும் ஏற்றவர்கள். இன்று நம் நாட்டில் ஜனநாயக சாஸனத்தைக் காப்பதற்கான ஒரு மகாயுத்தத்தில் போரிட வேண்டியவர்கள், பரம ஜாக்கிரதையாகத் தங்கள் தங்கள் அந்தஸ்தை ரட்சித்துக் கொண்டே ஸ்ரீமதி இந்திராவையும் அவரது கம்யூனிஸ, தி. மு. க. தோழர்களையும் வென்றுவிடலாம் என்று நம்புகிறார்கள்.

மக்கள் வேண்டுவது நல்லாட்சி; தங்களுக்கும், தங்கள் சொத்துக்களுக்கும் பாதுகாப்பு உண்டு என்ற உறுதி. இவையின்றித் தொழில் வளமும், முன்னேற்றமும் இல்லை. ஒரு ராஜ்ய சர்க்கார் இவற்றை வழங்கத் தவறும்போது, அங்கு ராஷ்டிரபதி ஆட்சி ஏற்படலாம் என்

பது சாலமம் வருந்த விதி. ஆனால் வங்கத்தில் ராஷ்டிரபதி ஆட்சி இத்தகைய பாதுகாப்பையோ, சமூக ஒழுங்குப்பாட்டையோ தரவில்லை எனப் பார்க்கிறோம். எனவே ராஷ்டிரபதி ஆட்சியால் பிரச்னை தீரும் என்று திருப்தி கொள்ளாதவர்களுக்கு இருப்பது ஒரே வழிதான். தில்லியில் வேறொரு சர்க்காரை— மக்களுக்குச் சுதந்திரம் அளித்து, அராஜகத்தையும் வன்முறையையும் ஒடுக்கக்கூடிய சர்க்காரை — அமைக்கத் தங்களால் இயன்றதைச் செய்வதே அது. வீண் செய்கிற ஒவ்வொரு நாளும் இப்பணியைக் கடினமாக்கும்.

# என்ன சேதி?

## அருணகிரி அவதாரம்

தேவாரத் திருமுறைகள் உலகுக்குக் கிட்டாதிருந்த போது, அவற்றைப் பாரில் பிரகடனம் செய்யத் தோன்றினார் ஒரு நம்பியாண்டார் நம்பி. வெளி உலகம் அதிகம் அறியாது தட்சிணேசுவரத்தில் ஸ்ரீ பரமஹம்ச ராமகிருஷ்ணர் அருளிய உபதேசங்களை யெல்லாம் நானிலம் அனைத்துக்கும் ஆக்கித் தந்தார் ஒரு விவேகானந்தர். இவ்விதமே பொது வழக்கில் அதிகம் இல்லாமல் இருளுக்குச் சென்றுவிட்ட திருப்புகழை மக்கள் அனைவர் நாவிலும் மனத்திலும் மேவச் செய்தார் ஒரு மகா புருஷர். அவரை அருணகிரி நாதரின் அவதாரம் என்றே சொல்வதுண்டு. வள்ளிமலை சுவாமிகள் என்று பெயர் கொண்ட ஸ்ரீ திருப்புகழ் சச்சிதானந்த ஸ்வாமிகள்தான் அம்மகான். நாற்பது வயது வரை படிப்பு வாசனையின்றிப் பரிசாரகத் தொழிலில் ஈடுபட்டிருந்த அர்த்தநாரியைப் பழனியாண்டவன் தன்பால் படுத்திக் கொண்டு ஆயிரமாயிரம் திருப்புகழ்களை அவர் மூலம் நாடெங்கும் பரப்பியது சமீப காலத்தில் நிகழ்ந்த தெய்வத் திருவிளையாடலாகும். இந்தப் பெருந் தகையாரின் நூறாவது பிறந்த தின விழா அவரது பெருமைக்கு உரிய பெரிய அளவில் நாடெங்கும் நடைபெற்று வருகிறது. திருப்புகழுக்குப் புகழ் தேடித் தந்த அப்பெரியாரின் தூய ஆன்மாவுக்கு நமது அஞ்சலிகளைச் செலுத்துகிறோம்.



வள்ளிமலை சுவாமிகள்

## வருந்துகிறோம்

திரு எம். பக்தவத்சலம் அவர்களின் இல்லத்தரசியார் ஸ்ரீமதி ஞானசுந்தரம் அம்மையின் மறைவு குறித்து வருந்துகிறோம். தஞ்சையைச் சேர்ந்த வழக்கறிஞரும் தேசியவாதியுமான திரு டி. வி. கோபாலசாமி முதலியாரின் திருமகளார் ஸ்ரீமதி ஞானசுந்தரம். பிறந்த வீட்டுக்கும், புகுந்த வீட்டுக்கும் பெருமை சேர்க்கும் வண்ணம் நம் பண்டைப் பண்புகளில் தோய்ந்தவராக அடக்கத்துடன், அன்புடன், தெய்வ பக்தியுடன் வாழ்ந்தார். அவரது இல்லத்தாருக்கு நமது ஆழ்ந்த அநுதாபம்.

ஸ்ரீமதி ஞானசுந்தரம்



## கோயிலைக் காப்போம் கோயில் காக்கட்டும்!

தருமத்தை நாம் ரட்சித்தால், தருமம் நம்மை ரட்சிக்கும் என்பது ஆன்றோர் வாக்கு. அவ்விதமே ஆலயங்களை நாம் முறைப்படி ரட்சித்தால், அந்த ஆலயங்கள் நம்மை ரட்சிக்கும். நம் இயல்போடு இயல்பாக, ரத்தத்தோடு ரத்தமாகக் கலந்துவிட்ட ஆலய வழிபாட்டு முறைகளை ஆராய்ந்தும் அலசியும் பார்க்க வேண்டிய துர்ப்பாக்கிய சூழ்நிலை இன்று ஏற்பட்டிருக்கிறது. இந்த அடிப்படையில், இந்த 5, 6 தேதிகளில் சேலத்தில் நடைபெறும் 'இந்து தேவாலயப் பாதுகாப்பு மாநில மாநாடு' மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பெரு மக்கள் பலர்—குறிப்பாக விசுவ ஹிந்துபரிஷத்தைச் சேர்ந்த அறிஞர்கள் — இம்மாநாட்டைக் கூட்டுகின்றனர். ஸ்ரீ காஞ்சி ஆசாரியாளின் பூரண ஆதரவு பெற்ற இம் மாநாட்டில் பல மடாதிபதிகளும், சமயப் பேரறிஞர்களும் பங்கு கொள்வர். அவர்கள் நமது புனிதப் பண்பாட்டுக்கு இசைவான முடிவுகளையே எடுப்பர் என நம்புகிறோம்.

இம்மாநாட்டின் மற்றோர் சிறப்பம்சம் சமீப காலத்தில் நடந்த பல ஆலயத் திருப்பணிகளில் விசேஷ பங்கு பெற்றோருக்குப் பொன்னாடை அணிவிப்பதாகும். ஆலய கலாசார பொருட்காட்சி, கலை நிகழ்ச்சி, சிறப்பு மலர் ஆகியனவும் மாநாட்டை யொட்டி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. மாநாட்டின் வெற்றிக்குச் சகல ஆலயங்களிலும் குடிகொண்டுள்ள சர்வேசுவரனைப் பிரார்த்திக்கிறோம்.

# உலகுக்கு ஒருவர்

*ஸ்ரீ வால்டர் ஆர். க்ராக்கர் அவர்கள் முன்னாளில் ஆஸ்திரேலிய தூதராக இந்தியாவில் பணியாற்றிய பேரறிஞர்; எழுத்தாற்றல் மிக்கவர்; உலக அரசியல் நுட்பங்களை அறிந்த ராஜதந்திரவல்லுனர். அவரது கருத்துக்கு சர்வ தேசத்திலும் மதிப்பு உண்டு.*

**தொ**ண்ணூற்று மூன்றாவது வயதைத் தொடங்கும் எவரையுமே அசாதாரணமானவர் எனலாம். மனித குலத்தில் மிக மிகச் சிறுபான்மையினரே அந்தப் பிராயத்தை எட்டுகின்றனர். இந்த வயதிலும் புத்திச் சக்தியை நிலையாகக் காத்து வருபவரோ மிக மிக அசாதாரணமானவர்தாம்!

ராஜாஜி தமது புத்திச் சக்தியை எப்படிக் காத்து வருகிறார் என்பது வாரா வாரம் 'ஸ்வராஜ்யா'விலிருந்து நிதரிசனமாகத் தெரிகிறது. அவரது ஆழ்ந்து உட்செல்லும் திட்சண்ணிய அறிவின் கூர்மை சற்றும் மழுங்கவில்லை; அவரது உன்னத ஆன்மா தனது தார்மிக ஆவேசத்தையும், பிறவிப் பணி பற்றிய உணர்வையும் சிறிதும் இழக்கவில்லை; அவரது திரம் தனது ஜொலிப்பை இம்மியும் இழக்கவில்லை; அவரது மொழியழகு அதன் சக்தியைத் துளியும் இழக்கவில்லை.

ராஜாஜியைப் பற்றித் தெரிந்த அனைவரும், புகழ்ச்சி என்பது அவருக்குத் துளிக்கூட ருசிக்காது என அறிவர். இந்த அசாதாரண மனிதரைப் பற்றிய ஓர் அசாதாரண அம்சமே இது. பலர்—முக்கியமாக அரசியலில் இருப்பவர்கள்—



வெற்று டம்பத்தின் உந்துதலில்தான் செயலாற்றுகிறார்கள். ஆனால் ராஜாஜியை இயக்குவிக்கும் சக்தி இதல்ல.

ஆண்டவன், தேசம் — என்ற இரண்டுக்கு அதிகமாகவோ குறைவாகவோ எதைக் குறித்தும் அவர் ஈடுபாடு கொண்டிருக்கவில்லை.

குறிப்பாக, இந்திய மக்களுக்கு நேரிடும் நிலை குறித்தும், அவர்களது ஆட்சியாளர் மக்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்பது குறித்தும் ஆழ்ந்த கவனம் கொண்டுள்ளார். ஆயினும் காந்திஜியைப் போலவே, அவரது ஈடுபாடு தாய்நாட்டுக்கும் அப்பால் செல்வதாகும். அது மனித குலம் முழுவதையும் தழுவியது. எனவே, அவர் காந்திஜியைப் போல் உலகோர் அனைவருக்கும் தொடர்புள்ளவர்; இந்தியரைப் போலவே இந்தியர் அல்லாதாருக்கும் தொடர்பு உள்ளவர். வெறும் லௌகிகத்தால் மட்டும் மனிதன் வாழ்வில்லை என்பதை நம் யாவருக்கும் அவர் நினைப்பூட்டுகிறார்.

இன்று மனித குலம் சரித்திர முக்கியத்துவம் பெறும் ஓர் அதிபயங்கர நெருக்கடியின் முன் நிற்கிறது. அது பற்பலவிதமான அணு ஆயுதங்களால் நாசமாகக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. அப்படி ஏற்படாவிட்டாலும், தவறான சித்தாந்தங்களையும் லட்சியங்களையும் பின்பற்றி, சமுதாயத்தை ஒரே இயந்திர மயமாக்கி விடுவதாலும் உலக சமுதாயத்தின் ஜீவன் அழிய வேண்டியதுதான்.

இச்சமயத்தில் நம்மை அறிவுசார்ந்த வழியில் திருப்புவதற்காக ராஜாஜி பல்லாண்டு வாழட்டும். கல்விமான், கற்பனை இலக்கியக் கர்த்தர், விளக்கவொண்ணாத் திவ்விய ஞானம் பெற்றவர், கருமத்தில் ஈடுபட்டிருப்பவர், சிந்தனையாளர், ஆட்சியறிவு பெற்ற தலைவர் — என இவ்விதம் பல்வேறு அம்சங்கள் அபூர்வமாக இணையப் பெற்ற ராஜாஜி உலகுக்கு மிகவும் தேவைப்படுபவர் — இந்தியருக்கு மட்டும் அல்ல!

வால்டர் க்ராக்கர்



# அஜீரணம் என்ருல் குழந்தை மீது எரிந்து விழுவானேன்?




ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்குச் சிறந்தது

அஜீரணத்தால் பாதிக்கப்பட்டால் உங்களுக்கு வயிற்றுப் பொருமலும், எரிச்சலும் ஏற்படுவது இயற்கை. குழந்தைகள் மீது எரிந்துவிழத் தோன்றும். தாய்மையின் அன்பு தணிந்து காணப்படும்.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது விரைவில் நிவாரணம் அளிக்கின்றது. வலியுண்டாக்கும் அமிலங்களைச் சமனப்படுத்தி ஜீரண உறுப்புக்கள் சரிவர இயங்குவதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கின்றது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கு நல்லது.

வயிற்றுப்போக்கு இருந்தால் அபினிசேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் (கறுப்பு மூடி) குணமளிக்கும்.

C.J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்
150A/2, மவுண்டு ரோடு, சென்னை 2

CJH-6099I

தங்களது கல்கி பத்திரிகையில் பூஜ்யஸ்ரீ ராஜாஜித் தாத்தா எழுதிவரும் ஸ்ரீமத் ராமாயணத்தைப் படித்துப் பயன்பெறும் எண்ணற்ற வாசகர்களில் நானும் ஒருத்தி. அதில் கூடவே வெளிவரும் சித்திரங்களும் என்னை வெகுவாகக் கவர்கின்றன. நான் இந்த வருஷம் உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடித்து, கல்லூரியில் முதலாவது ஆண்டு படித்து வருகிறேன். சென்ற கோடை விடுமுறையின் போது ராமாயணத்துக்கு திரு வினு அவர்கள் போட்டு வரும் சித்திரங்களைப் பார்த்து முதல் முதலாக நானும் பொழுதுபோக்காக வரையலானேன். அதில் ஆர்வமும் ஊக்கமும் உண்டாகி, ஒவ்வொரு கல்கி இதழையும் பார்த்து வரிசையாக ராமாயணச் சித்திரங்களை வரையலானேன். ஆரம்பத்திலிருந்ததை விட இப்பொழுது வேகமாகவும் கலபமாகவும் வரைந்து வருகிறேன். இந்தப் படங்களைப் பூர்த்தி செய்து நவராத்திரியின்போது ஒரு மண்டபம் போல் அமைத்து வைத்திருந்தேன். நண்பர்களும் உறவினர்களும் வந்து பார்த்து, சித்திரம் வரைவதில் அதிகமாக ஈடுபடும்படி ஊக்கினார்கள். பூஜ்யஸ்ரீ ராஜாஜித் தாத்தாவுக்கும், திரு வினு அவர்களுக்கும் தங்களுக்கும் என்னுடைய பணிவுள்ள நமஸ்காரங்களைத் தெரிவிப்பதோடு ஆசிகளையும் பெற விரும்புகிறேன். நவராத்திரியின்போது அலங்காரமாக வைத்திருந்த படங்களைப் புகைப்படம் எடுத்துக் கொடுத்தார் பள்ளி ஆசிரியர். அதையும் தங்களது பார்வைக்காக அனுப்பி இருக்கிறேன். வணக்கம்.

புதுதில்லி,

10-11-70 எஸ். சிதா

படம் வரைந்த குமாரி சிதாவுக்கு ராஜாஜி அவர்களின் ஆசிர்வாதம் கிடைத்து விட்டது. புகைப்படத்தின் பின்னாலேயே இப்படி எழுதியிருக்கிறார்:

20·11·70








## "ராஜாஜி - என் தந்தை"

'ராஜாஜி என் தந்தை' இன்று மாலையில் படிக்கத் தொடங்கி ஒரே மூச்சில் முடித்தேன். தனித்துவம் மிகுந்த பேரறிஞர் ஒருவருடைய சித்திரத்தை மிக நுட்பமாக, மிகத் தெளிவாக உருவாக்கி யிருக்கிறார் திரு அய்யாமுத்து. உண்மையிடம் அவருக்குள்ள பற்றும், ராஜாஜியிடம் உள்ள ஆழமான அன்பும் இந்தச் சாதனையை நிறைவேற்றி உள்ளன. புத்தகத்தைப் படிக்கும்போது, நாற்பத்தைந்து ஆண்டுகளில் நடந்த அரசியல் வரலாற்றுச் சிக்கல்கள், முடிச்சுக்கள் அவிழ்க்கப் பெற்றுக் கண்முன்னே விரிகின்றன. அவற்றின் மையத்தில், அறிவுப் பேரொளியோடு, தன்னலமற்ற துணிவோடு, சுதந்திரத்துக்காகப் போராடிய வண்ணம் ராஜாஜி நிற்கிறார். பார்த்து, வியந்து, பக்தியோடு முதலில் அவருக்குத் தலை வணங்குகிறேன். புத்தகத்தின் வெற்றிக்கு இதுதானே சான்று? இந்த வெற்றியைச் சாதித்த நூலாசிரியருக்கு என் பாராட்டும், வணக்கமும்.

—பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

"ராஜாஜி - என் தந்தை" எழுதியவர்: கோவை அய்யாமுத்து; கிடைக்குமிடம்: நிகின்பாதம்ஸ், சென்னை—2; விலை: ரூ. 2-50

## வீட்டிற்கு ஒரு ராம லட்சுமணர் வாருங்கள்

1942-ல் ஜப்பான் யுத்தம் பாரதத்தின் எல்லைக்கு வந்து விட்டது. காங்கிரசிலிருந்து விலகிய ராஜாஜி, கட்சி வரம்பைக் கடந்த ஒரு தேசப்பற்றை மக்களிடையே எழுப்பி வந்தார். "தாய்நாட்டைக் காக்க வீட்டிற்கு ஒரு ராம லட்சுமணர் வாருங்கள்" என்று மயிலாப்பூரில், மயிலைத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் ராஜாஜி பேசிய கூட்டத்தில் எடுத்த படம். கூட்டம் நடந்த இல்லத்தின் உரிமையாளர் 'எம். சுப்பராய ஐயர், தமிழ்ச்சங்கத் தலைவர் எஸ். வையாபுரிப் பிள்ளை, சங்கச் செயலாளர்கள் கா. ராமநாதன் செட்டியார், ஏ. டி. கிருஷ்ணமாச்சாரியார் ஆகியோர் ராஜாஜியை ஒட்டி உள்ளனர். மற்றும் திருப்புகழ் மணி, டி. கே. சி., அல்லாடி, டி. சுந்தராச்சாரியார், கே. பாலசுப்பிரமணிய அய்யர் ஆகியோர் உள்ளனர். பின்னாளில் தூக்குத் தண்டனை பெற்று, ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தபோது விடுதலை பெற்ற ராஜகோபாலன்-காசிராஜனும் இப்படத்தில் இருக்கிறார்கள்.

படம் உதவி: திரு ஏ. டி. கிருஷ்ணமாச்சாரி.



# கண் கட்டு மாயம்

கண்களில் பஞ்சை வைத்துக் கட்டிக்கொண்டு முதல்வர் கருணாநிதி, நேரு, லால்பகதூர், இந்திரா காந்தி, காமராஜர் போன்ற தலைவர்களின் படங்களை மிக நன்றாக வரைகிறார் திரு வி. கேசவன். கண்களைக் கட்டினாலும் என் கைகளைக் கட்டாதவரை படங்கள் வரைவதில் சிரமமில்லை என்கிறார் இவர். தஞ்சை அரசினர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது, ஓவியத்திறம், பாட போதனையிலும் தனித் திறமை காட்டியதற்காக இவருக்கு முதற் பரிசுகள் கிடைத்தன. கும்பகோணத்தில் சில பள்ளிகளில் தலைமையாசிரியராக இருந்து, தற்பொழுது பள்ளி மேற்பார்வையாளராகப் பணியாற்றும் இவர் 'இந்தக் கண்கட்டு ஓவியம்' கற்றுக் கொண்ட தெப்படி?





"ஒவ்வொரு நாளும் இரவு சாப்பாட்டிற்குப் பிறகு வீட்டிலுள்ள ஒரு கரும் பலகைமீது சாக்குக்கட்டியால் தலைவர்களின் படங்களைச் சாதாரணமாக எல்லோரும் போடுவதைப் போல் நானும் போடத் தொடங்கினேன். நாளடைவில் முன்னேற்றம் காணப் பட்டது.

"ஒரு நாள் வழக்கம்போல் இரவில் படம் போட்டுக் கொண்டிருந்தபோதே தூக்கக் கலக்கத்தில், கவனமில்லாமலேயே காந்தியடிகளின் படம் வரைந்து முடிவுபெற்றிருந்தது. விழித்துக்கொண்டேன். என் கை மட்டும் கரும்பலகையிலேயே இருந்தது. 'நம்மை அறியாமலேயே வரையப்பட்ட படம் தெளிவாகவும் அழகாகவும் அமைந்து விட்டதே!' என்று எனக்குள்ளேயே வியந்தேன். அன்று முதல் கண்களை மூடிக்கொண்டு படங்களை வரைந்துவிட்டு, உடனே விழித்துப் பார்ப்பேன். திருத்தங்கள் ஏதேனும் தேவைப்பட்டால் அதற்கேற்ப மறுமுறையும் மூடுவேன்" என்று கூறும் இவர், விடாமுயற்சி தான் இப்பயிற்சிக்கு முக்கியமாகத் தேவை என்கிறார்.

-பி. வி. இ



# மாணவர்கள்: நாட்டின் பெரிய பங்காளி

(1948-ல் பெங்களூர் சென்ட்ரல் கல்லூரி மாணவர்களிடையே பேசுகையில் ராஜாஜி கூறியதாவது:)

என் கலாசாலை வாழ்க்கையில் போதிக்கப்பட்டவைகளை நான் கவனமாகக் கேட்டதேயில்லை என்று கூற வேண்டும். நான் ஒரு பிற்போக்கான மாணவன் என்பதை ஒப்புக் கொள்வேன். இருப்பினும் நல்ல கல்லூரிகள், மாணவர்களுக்குத் தெரியாமலே அவர்களை நல்ல மாணவர்களாகச் செய்கின்றன. நான் என்ன கற்றேன், என்ன கற்கவில்லை என்று எனக்கு அப்போது தெரியாது. ஆனால் நான் நாட்டின் நன்மக்களுள் ஒருவனாக வர முடிந்தது என்பது உண்மை. எந்த நல்ல கல்லூரியும் செய்யும் உயர் தொண்டு அதுவே.

எனது கல்லூரிப் படிப்பு நல்ல தரமானதாக இருந்திருந்தால் நான் ஒரு புரொபசராக இருந்திருக்க வேண்டும். ஆனால் உண்மையில் நான் ஒரு தேசாந்திரியாகவே வாழ்க்கை நடத்தியிருக்கிறேன். பெரும் மாறுதல்களுக்குப்பின், தற்சமயம் தில்லி நகரில் "கவர்ன்மெண்ட் ஹவுஸ்" என்ற ஒருவிதச் சிறைக்கூடத்தில் இருக்கிறேன். என் நடவடிக்கைகள் ஒன்றாவது எனது இஷ்டத்தைப் பொறுத்ததல்ல. எல்லாம் திட்டமாக வரையறுக்கப்பட்டுள்ளன. நான் இங்கே சற்று விடுமுறைக்கு வந்தவன் போல் வந்துள்ளேன். இங்கேயும், நான் செய்யக் கூடாதவற்றைச் செய்யாமலிருக்கிறேனா என்பதைக் கண்காணிக்க, பலருடைய கூரிய கண்கள் என்னைப் பார்த்த வண்ணம் இருக்கின்றன.

என் கல்லூரிப் படிப்புக் காலத்தில் பெண்கள் கல்வி இவ்வளவாக முன்னேறவில்லை. இப்போது மைசூர், இத்தேசத்தின் இதர பகுதிகளைவிட வெகுவாக இத்துறையில் முன் சென்று விட்டது.... மாணவர்களுக்கு அளிக்கும் கல்வியைவிடப் பெண்களுக்கு அளிக்கும் கல்வி அதிக மதிப்புள்ளது. பெண்களுக்குக் கொடுக்கும் கல்வி உண்மையில் அவர்கள் வயிற்றில் பிறக்கப் போகிற குழந்தைகள் அத்தனைக்கும் கொடுத்த கல்வியாகும். கல்வி கற்ற பெண்கள் அனைவரும் கல்வி கற்ற தாய்மார் ஆகின்றனர். ஆனால் கல்வி கற்ற பையன்கள் தம்மட்டோடு சரி. அவர்கள் கல்வி, பயிற்சியெல்லாம் ஏதாவது ஒரு முதலாளிக்கும், அல்லது ஏதாவது ஒரு சர்க்கார் இலாகாவுக்குந்தான் பயன் படுவதாயிருக்கிறது. ஆனால், ஒரு கல்வி கற்ற பெண், தன் வீடாகிய சிறிய கல்லூரிக்குத் தலைவியாக (பிரின்ஸிபால்) விளங்குகிறாள். எனவே, ஆசிரியர் தொழிலை மேற்கொள்ளும் சில பையன்களைத் தவிர, மற்றபடி பெண்களுக்கு அளிக்கப்படும் கல்வி மிக மேன்மை பொருந்தியது. அதுவே நல்ல முதலீடு என்றும் கூறலாம்.

நான் பையன்களை இவ்வளவுக்குக் குறைத்துக் கூறினேன் என்று எண்ணாதீர்கள். நான் கூறும் ஒரு வழியைக் கடைப்பிடித்தால் நீங்களும் பெண்களைப் போல் உபயோக முள்ளவர்கள் ஆகிவிடலாம்.

கல்வி கற்ற ஆண்கள் தினந்தோறும் சிறிது நேரம் தங்கள்



சிறுவர்களின கல்விக்குச் செலவிட வேண்டும். நமது கற்றறிந்த இளைஞர்கள் தத்தம் காரியாலயங்களில் ஒழுங்காகவும் முறையாகவும் நடந்து கொள்கின்றனர். வீடு திரும்பியதும் எரிச்சலையும் கோபத்தையும் காண்பிக்கின்றனர். ஒவ்வொருவருடனும் சண்டையிடுகின்றனர். இது மிகத் தவறானது. ஒவ்வோர் இளைஞனும் தனது நேரத்தில் ஒரு பகுதியை வீட்டில் உள்ள குழந்தைகளைப் பராமரிப்பதில் செலவிட்டு, பள்ளிக்கூட உபாத்தியாயர்களின் சிரமத்தைச் சற்றுக் குறைக்க முற்பட வேண்டும். அப்படிச் செய்தால்தான், அவர்கள் கற்ற கல்வி பயனுடையதாகும்.

பள்ளிக்கூடத்துக்கு உங்கள் பிள்ளைகளை அனுப்பிவிட்டு, அத்துடன் போதும் என்று இருந்து விடாதீர்கள். நீங்களும் அவர்களுக்குப் போதித்து வந்தால்தான் உங்களுக்கும் உங்கள் படிப்பு விருத்தியடையும். பிறருக்குப் போதிக்கையில் உங்கள் படிப்பை நீங்களே சரி பார்த்துக் கொண்டு, எங்கு குறைபாடு தோன்றுகிறதோ, அங்கெல்லாம் உங்களைத் திருத்திக் கொள்கிறீர்கள்.

நான் வயதான கிழவன். பல கஷ்டங்களும் அனுபவித்திருக்கிறேன். மேலும் மேலும் அன்புதான் மனித சமூகத்துக்கு அதிகத் தேவை என்பதை உணர்கிறேன். மனித சமூகத்தில் அன்பு நிலவினால்தான், உலகத்துக்கே உய்வுண்டு... நீங்கள் என்னதான், விலங்கியல், உயிர் நூல், ரசாயனம் மற்றும் எல்லாவற்றையும் கற்றாலும், நேச பாவத்தையும் அன்பையும் கற்கவில்லையென்றால் நாட்டுக்குச் சுபிட்சம் கிடையாது. அது இருப்பின் எல்லாம் நன்றாக இருக்கும். உங்கள் வீடு முதல் உலகம் முழுமையும் பிரகாசமாய் விளங்கும்.

கூனநாயகத்தின் கீழ், சர்க்காருக்கு மாணவர்கள் உள்பட ஒவ்வொருவருடைய ஒத்துழைப்பும் இன்றியமையாததாகிறது. உங்களுக்குக் கோபம் என்றால் சுவரில் முட்டிக் கொள்ளுங்கள்! 'ஸ்டிரைக்' செய்வது மட்டும் வேண்டாம். எல்லாப் பிணக்குகளையும் விடாமல் எடுத்துச் சொல்லித் தீர்த்துக் கொள்ளலாம். நாம் காலத்தை வீணாக்கக் கூடாது. ஒவ்வொருவரும் அவரவருடைய நேரத்தை வீணாக்காமல் ஏதாவது உபயோகமுள்ள வேலையைச் செய்ய வேண்டியது அத்தியாவசியம். அப்படிப் பார்த்தால் 'ஸ்டிரைக்' செய்பவன் தேசத்துக்குத் துரோகியாவான். நமது நாடு செழித்தோங்க இந்த வழியையே கடைப்பிடிக்க வேண்டும்.

பெண்கள், நான் முன்னால் சொன்னதைக் கொண்டு, கர்வம் அடையக் கூடாது. கல்லூரியில் கற்றதை மறக்காதிருப்பதோடு, வீட்டிலும் குடும்ப பாரத்தைத் திறமையாக வகிக்க வேண்டும். ஒரு நாட்டு அரசாங்கத்தின் வேலை இரு பகுதிகளாக உள்ளது. ஒன்று, ஒவ்வொரு வீட்டிலும் தாய்மார்கள், சகோதரிகளுடைய மேற்பார்வையிலும் பராமரிப்பிலும் நடைபெறுகிறது. மற்றொன்று, அரசாங்கமும் பொதுமக்களும் சேர்ந்து செய்து வருவது. நாம் குழந்தைகளைச் செவ்வையாக வளர்க்காவிட்டால் அவர்கள் நல்ல மக்களாக வளர முடியாது. இந்த வேலையில் சிறந்த பகுதியைத் தாய்மார்களும், சகோதரிகளுமே செய்கின்றனர். எனவே நாட்டின் பெரிய பங்காளி அவர்களே என்று கூறலாம். அவர்கள் பொறுப்பிலுள்ள வேலைப் பகுதியே கஷ்டமான பகுதியும் ஆகும்.

('குமரி மலர்' சாதாரண ஆண்டு, ஐப்பசி மாத இதழில் வெளி வந்தது.)

□ □ □ □ □ □ □ □ □

1937ல் ராஜாஜி சென்னை மாகாணப் பிரதமராக இருந்தபோது சட்டசபையில் விவசாயச் சீர்திருத்தம் பற்றிய சட்டமொன்றை நிறைவேற்றத் திட்டமிட்டார். அது பற்றி ஸ்ரீ டி. டி. கே. கருத்துத் தெரிவிக்கையில் "விவசாயிகளின் கடன் நிவாரணச் சட்டம் கொண்டு வருமுன் கடன்களைப் பற்றிச் சரியான புள்ளி விவரங்களைச் சேகரிக்க வேண்டும்" என்றார்.

ராஜாஜி அதற்குக் கூறிய பதில்: "கொசுக்கள் தொந்தரவைப் போக்கிக் கொள்ள டி. டி. கே. கொசுவலை வாங்குகிறார் என்று வைத்துக்கொள்வோம். கொசுவலை வாங்கு முன்னர் சென்னையிலுள்ள கொசுக்கள் அனைத்தையும் அவரால் எண்ணி முடியுமா?" தகவல்: ஜெகன்





□ □ □ □ □ □ □ □




# ரகுபதி ராகவ

தமிழாக்கம்: ராஜாஜி

## 53

மனிதன் பூரணத்தை அடைய ஆசைப்படுகிறான். முயற்சியும் செய்கிறான். இதனின்றே ஹிந்து சம்பிரதாயத்தில் பகவான் அடிக்கடி அவதாரம் எடுக்கிறான் என்கிற கொள்கை பிறந்திருக்கிறது.

கடவுள் தன்மையை அடைய வேண்டும் என்று மனிதனுடைய உள்ளத்தில் இடைவிடாத ஆசையொன்று இருக்கிறது. ஆசைகளுக்குள் தர்மத்துக்குப் புறம்பாகாத ஆசை இது. தெய்விகத் தன்மையை ஆன்மா அடைய முடியும். கீதை மட்டுமல்ல, எல்லா மதங்களிலுமே 'உன்னுடைய பூரணத்தை நீ கண்டு கொள்' என்று உபதேசிக்கப்படுகிறது. இந்தப் பூரணத்தை அடைவது எப்படி, தன்னைத்தான் உயர்த்திக் கொள்வது எப்படி, இதற்கு கீதை வழி காட்டுகிறது. ஹிந்து நூல்களில் எல்லாம் ஆங்காங்கே சொல்லப்பட்டிருந்த போதிலும், மிகத் தெளிவாக கீதையில் இது விளக்கப்பட்டிருக்கிறது. நன்றாகத் தெளிவுபடுத்துவதற்காக, 'கூறியது கூறல்' என்கிற குற்றத்தையும் பாராமல் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது.

தன்னைத்தான் உயர்த்திக் கொள்வதற்கும் ஆன்மா பூரணத்தை அடைவதற்கும் வழி ஏதெனின், செய்யும் செயலில் உண்டாகும் பயனைக் கருதாமல் செய்ய வேண்டியதைச் செய்து முடித்தல். இதுவே கீதையின் முக்கியமான உபதேசம்.

கீதா சாஸ்திரத்தின் நடுநாயகமாக விளங்குவது லாபத்தைக் கருதாமல் கடமையைச் செய்ய வேண்டும் என்கிற உபதேசம். துறவு என்றால் செயலினால் உண்டாகும் லாபத்தைத் துறத்தல். சந்நியாசம் என்றால் சுயநலனை விட்டுவிடுதல். சுயநலனைக் கருதாமல் செய்ய வேண்டியதைச் செய்து கொண்டு போவதே உண்மையான துறவு நிலை. இந்த உண்மையை மையத்தில் வைத்து, சூரியனைக் கிரகங்கள் சுற்றுவது போலும், அதனின்று ஜோதியைப் பெற்றுப் பிரகாசிப்பது போலும் மற்ற எல்லா உபதேசங்களும் வேகம் பெறுகின்றன. தியானம், பக்தி, அமைதி முதலிய அநேக விஷயங்கள் கீதையில் போதிக்கப்பட்டாலும் பயனைக் கருதாமல் கடமையைச் செய்வது தான் முக்கிய உபதேசம்.

உடல் என்பது ஒரு சிறை. அந்தச் சிறைக்குள் அடைபட்டிருக்கும் உயிர் கர்மம் செய்தே தீர வேண்டும். செய்யாமல் சும்மா இருக்க முடியவே முடியாது. இந்த நியதி அனைவரையும் கட்டுப்படுத்துகிறது. ஆயினும் எல்லா மதங்களிலும் சொல்லப்படுவது என்னவென்றால் உடலை ஆண்டவனுடைய கோயிலாகக் கருதி வாழ்க்கை நடத்தினால் விடுதலை பெறலாம்.

எல்லாக் காரியத்திலுமே தோஷம் இருக்கும். எந்தச் சின்ன காரியத்திலுமே இது உண்மை. தோஷத்திலிருந்து முற்றிலும் விடுபட்ட செயலைக் காண்பது அரிது. செயலை எப்படிச் சுத்தமாக்குவது என்பது கேள்வி. உடலை எப்படி ஆண்டவனுடைய கோயிலாகச் செய்வது? இந்தக் கேள்விக்குக் கீதையில் சொல்லப்படும் விடை என்னவென்றால், "சுயநலத்தைத் துறந்து எந்தச் செயலையும் செய், பலனைக் கருதாமல் கருமத்தைச் செய். உன் காரியங்களை எல்லாம் ஆண்டவனுக்கு அர்ப்பணமாகச் செய். உன் உயிரையும் உடலையும் ஆண்டவனுக்குச் சமர்ப்பித்துவிடு" என்பதே. இதுவே கீதையின் சாரம்.

பலனைத் துறந்துவிட்டு உன் வேலையைச் செய் என்பது வெறும் பேச்சில் முடிந்து போகாது. உண்மையை அறிவது மட்டும் போதாது. அந்த முடிவை அடைய வேண்டுமானால் உள்ளத்தைக் கடைந்து கடைந்து வெண்ணெயைத் திரட்ட வேண்டும். படிப்பு மட்டும் போதாது. படித்தவர்கள் அறிவை அடைகிறார்கள். வேதங்களைத் தலைகீழாக ஒப்பிப்பார்கள். எவ்வளவு அறிவு அடைந்திருந்த போதிலும் சுயநலத்தை விடமாட்டார்கள். படிப்பு மட்டும் போதாது என்பதற்காகத்தான் பக்தியையும் தியானத்தையும் உபதேசிக்கிறான் கீதாசாரியன். சிரத்தை இல்லாத அறிவு குண்டு இல்லாத துப்பாக்கி வெடியைப் போலாகும். ஆனபடியால், கீதையில் சொல்லப்படுவது, பக்தி செலுத்து. அறிவு தானாகவே வரும் என்று.

பக்தி என்பது வெறும் வாசா கைங்கரியமல்ல. யமனுடன் மல்யுத்தம் செய்வது போன்றதாகும் உண்மையான பக்தி. இதனால்தான் பக்தனுடைய இலட்சணங்களைச் சொல்லும் போதெல்லாம் கீதையில் யோகியைப் பற்றிச் சொல்வது போலச் சொல்லப்படுகிறது.

பக்தி வெறும் மூடக் கொள்கையல்ல. விஷயமறியாமல் பேச்சுக்கள் பேசுவதுமல்ல. வெளிவேஷமும்? அல்லவே அல்ல. துளசி மாலை, நெற்றியில் நாமம், கோயில் பூஜை இவையெல்லாம் இருக்கலாம். ஆனால் பக்திக்கு அடையாளம் இவை மட்டுமல்ல. யாரைக் கண்டும் பொறாமைப்படாதவன் பக்தன். உள்ளத்தில் இரக்கம் நிறைந்தவன் பக்தன். 'நான்', 'எனது' என்கிற அகங்கார மமகாரங்களைத் துறந்தவன் பக்தன். தன்னை மறந்தவன் பக்தன். குளிரும் வெப்பமும் இரண்டையும் ஒன்றாகக் கருதுவான். சுகம்-துக்கம் என்கிற வித்தியாசம் பார்க்கமாட்டான். பிறர் செய்த குற்றத்தை மறப்பான். எப்போதும், உள்ளத்தில் திருப்தி நிறைந்திருக்கும். மனத்தை உறுதி நிலையில் நிறுத்தியிருப்பான். தன் உள்ளத்தையும் தன்னையுமே பகவானுக்கு அடிமையாக்கி விட்டிருப்பான். அவனுக்குப் பிறரைக் கண்டால் பயமில்லை; அவனைக் கண்டால் யாருக்குமே பயமிராது. நல்லது வந்தால் மகிழ்ச்சிப் பரவசமாகமாட்டான். கஷ்டத்தைக் கண்டு துக்கப்படமாட்டான்; பயப்படமாட்டான்.

உள்ளம் எப்போதும் சுத்தமாக இருக்கும். செய்யும் செயல்களில் குற்றம் குறை இருக்காது. சாமர்த்தியமாகவே செய்வான். ஆனாலும் பயனைக் கருத மாட்டான். வெற்றியினாலும் தோல்வியினாலும் நிலை இழக்கமாட்டான். புகழும் இகழும் இரண்டையும் ஒரே விதமாகப் பொறுப்பான். பாராட்டுதலினால் கர்வமடையமாட்டான். அவதூறினால் மனத் தாழ்ச்சி அடைய மாட்டான். தனியாக இருப்பதும் பேசாமலிருப்பதுமே விரும்புவான். குற்றமற்ற அறிவைப் பெற்றிருப்பான். இவையே பக்தனைக் குறிக்கும் அடையாளங்கள். பற்றுக்களை அறுத்தவனிடம் தான் இவற்றைக் காண முடியும்.

# சென்னையின் பிரதமராக ஸி.ஆர்

[1937ல் ஆந்திரம் உள்ளிட்ட சென்னை ராஜதானியின் பிரதம மந்திரியாக ராஜாஜி இருந்தபோது கவர்னராக இருந்தவர் எர்ஸ்கின் பிரபு அவர்கள். 1948ல் ராஜாஜி கவர்னர் – ஜெனரலானதை யொட்டி, 'ஹிந்து' பத்திரிகையின் அவ்வருட சுதந்திர தின ஏட்டில் ஸ்ரீ எர்ஸ்கின் எழுதிய கட்டுரையின் தமிழ் வடிவத்தை இங்கு அளிக்கிறோம்.
– ஆசிரி...]

என் பெருமதிப்புக்கு உகந்த பழைய தோழர் ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் இந்திய டொமினியனின் கவர்னர் - ஜெனரலாக நியமனம் பெற்றிருப்பது கண்டு என்னைவிட மகிழ்ச்சி கொண்டவர் எவரும் இருக்க முடியாது. பொறுப்பு மிகுந்த அந்த உன்னத பதவிக்கு அவரைக் காட்டிலும் தகுதி பெற்ற வேறு எவரையும் தேர்ந்தெடுத்திருக்க முடியாது என்பது என் கருத்து.

நான் முதன் முதலில் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரைச் சந்தித்த போது அவர் காங்கிரஸ் கட்சியின் சென்னை ராஜதானிக் கிளையின் தலைவராக இருந்தார். 1935ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தின் கீழ் காங்கிரஸ் கட்சியானது ஆட்சிப் பொறுப்பு ஏற்கலாமா கூடாதா என்று அப்போது நிச்சயமாகவில்லை.

இதைத் தொடர்ந்து நிகழ்ந்த பேச்சு வார்த்தைகளில் அவருடன் நான் தனித்திருந்து பல முறை பேச நேர்ந்தது. நிர்வாகம் என்கிற கனமான பொறுப்பைக் காங்கிரஸ் ஏற்பதால் முற்றிலும் நன்மையே விளையும் என்று இப்பேச்சுக்களின்போது எங்கள் இருவருக்கும் தெளிவாகத் தெரிந்தது எனலாம். சென்னை ராஜதானியின் நலனுக்காக நாங்கள் ஒன்று சேர்ந்து உழைப்பதில் ஒருவித சிரமமும் இராது என இருவரும் கண்டோம். எனவே பிற்பாடு ராஜதானிகளில் காங்கிரஸ் கட்சியானது அரசாங்கம் அமைக்கலாம் என்று அகில இந்திய காங்கிரஸ் எடுத்த முடிவுக்கு அந்தக் கட்சியில் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரிக்கு இருந்த பெரும் செல்வாக்கு பெருமளவு [illegible] வுக்குக் காரணம் என உறுதியாகக் கருதுகிறேன்.

சென்னையில் அவர் பிரதம மந்திரியாகப் பதவி வகித்த காலகட்டத்தில் அவருடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தேன் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அவரது பதவிக் காலத்தில் ஒரு நாள்கூட நாங்கள் நேரில் சந்திக்காமலோ, அல்லது எழுத்து மூலமாகவது தொடர்பு கொள்ளாமலோ இருந்தது கிடையாது. எனவே அவரை வெகு நெருக்கமாக அறியலானேன்.

அவரை என் நண்பர்களிடை முதன்மை ஸ்தானம் பெற்றவராக அடைந்தேன். என் சகபாடிகளிடையே மிக மிக செயலூக்கமானவராக அடைந்தேன். நிர்வாக விவகாரங்களில் நான் அன்றும், இன்றும் என்றும் கண்டவர்களில் இவர் தலைசிறந்த திறமைசாலிகளில் ஒருவர் என உணர்ந்தேன். அப்போதிருந்த அனுபவஸ்தர்களான ஐ. ஸி. எஸ். அதிகாரிகள் நிர்வாகத் திறன் குறித்து எடை போட்டு முடிவு சொல்வதில் சிறப்பான தகுதி பெற்றிருந்தவர்கள். அவர்களும் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியின் மகத்தான ஆற்றலையும் பகுத்தறிவையும் போற்றினர்.

ஆங்கிலேயர் ஆட்சியை இதுகாறும் நீண்ட காலமாக காங்கிரஸ் எதிர்த்து வந்தமையால், இப்போது பிரிட்டிஷ் கவர்னருக்கும் காங்கிரஸ் தலைவருக்குமிடையே உள்ள தொடர்பு சுமுகமாக இருக்கவே முடியாது என்று மக்கள் எண்ணியிருப்பர். ஆனால் உண்மையில் நடந்தது இதற்கு முற்றிலும் மாறானது.

என்னிடமிருந்து ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் ஏதும் கற்றுக் கொண்டாரா என்று அறியேன். அவ்வாறு கற்க ஏதும் இருந்திராது என்றே எண்ணுகிறேன். ஆனால் சர்வ நிச்சயமாக அவரிடமிருந்து நான் கற்றுக் கொண்டது ஏராளம். தனித்து ஓங்கி நிற்கும் இந்த வியக்தியுடன் நெருங்கிப் பழகியது காரணமாக, விரைவிலேயே பிரிட்டிஷ் காமன்வெல்த்



• எர்ஸ்கின் பிரபு •




இந்த ராஜாஜி மலரில் மாணவர், மாணவிகளுக்கென்றே ராஜாஜி எழுதிய ஒரு கட்டுரை இடம் பெறுகிறது. அது மாணவர் உலகம் முழுமைக்கும் ராஜாஜி தரும் பரிசு.

இது தவிர, கீழே விவரிக்கப்பட்டுள்ள கட்டுரைப் போட்டியில் முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகளைப் பெறும் மாணவர்களுக்கு ராஜாஜி தாம் எழுதிய நூல்கள் பலவற்றில் கையெழுத்துப் போட்டு அன்பளிப்பாக வழங்குவார். 'கல்கி'யில் பிரசுரமாகும் இந்தக் கட்டுரைகளுக்கு இக்காரியாலயத்தின் சன்மானமும் உண்டு.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 100 |
| இரண்டாம் பரிசு | ரூ. | 75 |
| மூன்றும் பரிசு | ரூ. | 50 |

கட்டுரைப் போட்டி விவரம் :—

"உண்மையே வெல்லும்" என்ற தலைப்பில் கட்டுரையை எழுத வேண்டும்.

'கல்கி'யில் சுமார் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாமல் இருத்தல் நலம்.

பிரசுரமாகாத கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை.

முடிவு தேதி : டிசம்பர் 31உ.

கல்லூரி மாணவ, மாணவிகள் மட்டுமே கலந்துகொள்ளலாம்.

கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

ஆசிரியர், கல்கி, சென்னை 31 என்ற விலாசத்துக்கு அனுப்பவேண்டும்.

உறையின்மீது "உண்மையே வெல்லும்" என்று குறிப்பிடவும்.

---

தில் ஒரு சுதந்திர நாடாக ஸ்தானம் பெறுவதற்கு இந்தியா நல்ல தகுதியைப் பெற்று விடும் என்ற உறுதி எனக்கு உண்டாயிற்று.

இன்று, சுமார் பத்தாண்டுகளுக்குப் பிறகு, அன்றைய சர்ச்சைகளும் கூப்பாடுகளும் மடிந்துவிட்டதைக் கருத்தில் கொண்டு, ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியின் மந்திரி சபை போராடவேண்டியிருந்ததை எண்ணிப் பார்க்கையில், அது நல்லாட்சி என்றும், திறமை மிகுந்த ஆட்சி என்றும் உணர்கிறோம். அது பெற்ற வெற்றிக்குப் பிரதானமான காரணம், அதன் பரம உத்தமமான யோக்கியதாம்சம் வாய்ந்த தலைவருடைய விசால மனமும், செயல் துடிப்பும், சாதுரியமுமே.

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி நல்லதோர் அரசியல்வாதி, நிர்வாகத் திறமைசாலி என்று சொன்னால் மட்டும் போதாது. அவர் இவற்றுக்கு மிகவும் மேம்பட்டவர். அவர் ஒரு ராஜநீதி வல்லுநர். அவர் எப்போதுமே அவசரக் கோலத்தைத் தடுத்து மிதப்படுத்தும் திசையில் தமது செல்வாக்கைச் செலுத்தியவர். இந்தியாவின் பல்வேறு சமுதாயங்களிடையே சமநீதி நிலவும் விதத்திலேயே அவர் அனைவரதும் தலைக்கோலைத் தாங்கிப் பிடித்து வந்திருக்கிறார். அவர் தீரர்; தீர்க்க திருஷ்டி வாய்ந்தவர். இன்று இந்தியாவின் பிரமுகசபையில் அவரது அபூர்வமான குண நலன்கள் தேசத்துக்குப் பெரும் பணி புரியும்.

இக் கட்டுரை எழுதி இப்போது இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு மேலாகி விட்டது.

# அருமையாகத்தான் சொன்னார் அருணாசலம்

[புத்தகத்தைக் கண்ணால் பார்க்காமலேயே விழாவில் அதை வெளியிட வருபவர்கள் உண்டு. படித்துப் பார்க்க அவகாசமில்லை என்று காரணம் கூறுவோரும்; மேலெழுந்தவாரியாகப் படித்துப் பார்த்தேன் என்று சொல் லும் அரைகுறை ஆசாமிகளும் நமக்குப் பழக்கம்தான்.

இதற்கெல்லாம் விதிவிலக்காக "நகரத்தார் வரலாறு" என்ற நூலினை வெளியிட முன்வந்த திரு ஏ. எம். எம். அருணாசலம் நூலினை நன்கு படித் திருந்ததோடு அதைப்பற்றி அழகான சொற்பொழிவையும் முன்கூட்டியே தயாரித்துக் கொண்டு விழாவுக்கு வந்திருந்தார். 21-10-70ல் அவர் உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நிகழ்த்திய உரை புத்தகத்தின் சிறப்பைக் கூறுவ தோடு நகரத்தார் சமூகத்தைப் பற்றிய ருசிகரமான தகவல்களையும் தருகிறது; அதற்கும் மேல் சென்று நாட்டு நிலவரத்தையும் ஆராய்கிறது.

அனைவரும் படித்துப் பயனுற வேண்டிய அருமையான உரை என்பதால் இங்கு வெளியிடுகிறோம். — ஆசிரியர்]

## நகரத்தார் செய்யும் நற்பணி

இன்று வெளியிடப்படும் "நகரத்தார் வரலாறு" ஒரு சிறந்த புத்தகம். இதை எழுதிய திரு ஏ. சேஷாத்ரி சர்மா எண்பத்திரண்டு வயதடைந்த முதியவர். பத்திரிகைத் தொழி லில் சுமார் ஐம்பது ஆண்டுகளாக ஈடுபட்டுப் பெருமை வாய்ந்தவர். சுதேசமித்திரன், தேசபக்தன், செட்டி நாடு போன்ற பத் திரிகைகளில் ஆசிரியர் குழாத்திலும், ஆசிரிய ராகவும் பல ஆண்டுகள் பணியாற்றியவர். திரு வி. க., வ. ரா. போன்ற தலைசிறந்த எழுத்தாளர்களுடன் தோழமை கொண்ட வர். எல்லாவற்றையும்விட இங்கே விசேஷ மாகச் சொல்ல வேண்டியது இந்நூலை எழுதுவ தற்கு திரு ஏ. சேஷாத்திரி சர்மாவின் பிரத்தி யேகத் தகுதி. இருபத்திரண்டு ஆண்டுகளாகச் 'செட்டிநாடு' பத்திரிகை ஆசிரியராக இருந்த தாலும், செட்டியார் குடும்பங்களிடத்தும் பிரமுகர்களிடத்தும் நெருங்கிப் பழகிய அநுப வத்தாலும், இந்த ஆராய்ச்சி நூலை எழுத வல்ல முழுத் தகுதி உடையவர்.

நல்லதோர் ஆசிரியர், நல்லதொரு விஷயம், இரண்டும் கிடைத்தால் நல்லதொரு புத்தகம் உருவாகத்தானே வேண்டும்? நமது சமூகமும் — இச்சமூகத்தைச் சேர்ந்த வன் என்பதால் உரிமையுடன் "நமது" என்று சொல்லுகிறேன் — காலப் போக்கில் மாறுதல் களை அடைந்து வந்திருக்கிறது. எனவே, இப் போது இச்சமூகத்தினரைப் பற்றிய ஒரு நூல் வெளியிடுவது அவசியமானதே. இதை நான் வரவேற்கிறேன். நம் சிறப்புகளை நாம் அடிக் கடி சிந்தித்துப் பார்த்து நம்மை உயர் மட்டத் திலேயே வைத்துக் கொள்ள இது உதவும்.

திரு சர்மா எழுதியுள்ள இந்தப் புத்தகம் இரண்டு வகையில் சிறப்புள்ளதாக நான் கருதுகிறேன். இது நகரத்தார் பற்றிய வர லாறு மட்டுமல்ல. ஆராய்ச்சியும் கொண் டது. தன வணிக வைசியர் வாழ்ந்த காலம், வசித்த பிரதேசங்கள், மூவேந்தர்கள் அவர் களுக்கு அளித்த ஆதரவுகள், கடைசியில் அவர்கள் நிலைத்துத் தங்கிய செட்டிநாடு எல்லைகள் ஆகிய பல விஷயங்களைத் தக்க ஆதாரங்களுடன் ஆராய்ச்சி செய்து, எல்லோ ராலும் ஒப்புக் கொள்ளக்கூடிய முடிவுகளையே எடுத்துச் சொல்லியிருக்கிறார். எனவே, இதை நகரத்தார் சமூகம் மட்டுமின்றி மற்றவர் களும் படித்துப் பயன் பெற வேண்டும்.

இரண்டாவதாக, இச்சமூகத்தில் திலகங்கள் போல் விளங்கிய, விளங்கிக் கொண்டிருக்கும்





"நகரத்தார் வரலாறு" நூலை டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலை அதிபர் திரு ஏ. எம். எம். அருணாசலம் வெளியிடுகிறார். திரு பி. வி. ஆர். எம். குழந்தையன் செட்டியார் முதற் பிரதி வாங்குகிறார்.

பல பெரியார்களைப் பற்றிய சிறு குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருப்பது இப்புத்தகத்துக்கு நிறைவைத் தருகிறது.

நகரத்தார் சமூகத்தைப் பற்றி இந்தச் சந்தர்ப்பத்தில் சில வார்த்தைகள் பேசுவது பொருத்தம் என்று நினைக்கிறேன். இவர்கள் எழுபத்தெட்டு ஊர்களில் வசிக்கும் ஒரு சிறிய சமூகம். சற்றேறக் குறைய ஐம்பதாயிரம் ஜனத்தொகைதான் இருக்கும். எண்ணிக்கைப்படி பார்த்தால் இச்சமூகம் ஒரு சிறுபான்மையினர் சமூகம். (Minority Community) உதாரணத்துக்கு பார்ஸி இனத்தார் நம் நாட்டில் உள்ளது போல் என்று சொல்லலாம். எண்ணிக்கையில் குறைவு. ஆனால் அவர்கள் பெரும்பான்மையினர் சமூகத்துக்குச் சமமான முக்கியத்துவம் பெற்றவர்கள். அவர்கள் செய்யும் தொழில் காரணமாக உயர் நிலையிலேயே இருக்கும் ஒரு சமூகம். பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே இந்தச் சிறப்பு நிலையை அவர்கள் அடைந்து, தென்னாட்டு மன்னர்களால் போற்றப்பட்டு வந்துள்ளனர். இந்தப் புத்தகத்தில் இதைப் பற்றி விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட பெருமைக்குக் காரணம் என்னவென்று பார்த்தால், அவர்களுடைய விசேஷ குணங்கள்தான் காரணம் என்று உணரலாம். நாட்டின் பொருளாதார வளத்தைச் செழிக்கச் செய்வதில் கண்ணும் கருத்துமாக இருத்தல்; எந்தெந்த நாட்டில் தொழில் நடத்துகிறார்களோ அந்தந்த நாட்டு மக்களுடன் ஒன்றாகப் பழகி, அந்தந்த நாட்டுப் பொருளாதாரத்தை வளர்ப்பது; ராஜ விசுவாசத்துடன் சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து செயலாற்றும் தன்மை; மிகுந்த தன்னம்பிக்கை, தைரியம், பொறுப்புணர்ச்சி, தளராத உழைப்பு, ஊக்கம், செட்டாக வாழ்க்கை நடத்தும் சுபாவம், நேர்மை,

நாணயம், சமய ஒழுக்கம், சமூகக் கட்டு
பாடு ஆகியவற்றில் அசைக்க முடியாத பற்
ஆகியவை குறிப்பிட்டுச் சொல்ல வே
டியவை. அறப் பற்றும், சமயப் பற்று
செட்டியார்களுடைய விசேஷ குண
நலங்கள். அவர்கள் சுபாவத்திலேயே தர்
சிந்தனை உள்ளவர்கள். இந்த உயர்ந்த குண
களைக் கடைப்பிடித்துத் தொழிலில் வெற்
கண்டவர்கள். நமது தாய்நாட்டின் வள
துக்காக, நமது பொருளாதாரத்தின் உய
வுக்காக, நம்முடைய சமூகம் மேன்மை
அடைவதற்காக, தொழில்களை நம் நாட்டி
ஆரம்பித்து நடத்தி, பல பேர்களுக்கு வே
வாய்ப்புக்கள் அளித்து, இவர்கள் மற்ற சி
சமுதாயத்தார் போல் நம் நாட்டுக்குப் பய
யாற்றிக் கொண்டு வருகின்றனர்.

ஆனால் இப்போதெல்லாம் அரசாங்க
த்தினரின் கொள்கைகளும், கோட்பாடுகளு
மாறிக் கொண்டு வருகிற காலம். உழைப்பு
கும், ஊக்கத்துக்கும் இப்போதெல்லா
மதிப்புக் குறைந்து வருகிறது. வேலை செ
யாமல் அல்லது குறைந்த வேலை செய்
லாபம் வரவேண்டும் என்று எண்ணும் மன
பான்மை. செல்வம் பெருக்குபவர்களைக் கட
டால் பொறாமை. தொழில் வளர்வதற்
அநேகத் தடைகள் விதிக்கப்படுகின்றன
தனிப்பட்டவர்கள் தொழிலில் வேகமாக மு
னேறினால் அதைக் கட்டுப்படுத்தி முடக்
வதில் ஓர் அசாதாரண வேகம்.

இப்படிப்பட்ட போக்குகள் இப்போ
தெல்லாம் அதிகமாகக் காணப்படுகிற;
இவை விரும்பத்தக்கன அல்ல. ஊக்கத்துச்
ஆதரவு அளிக்க வேண்டும். தொழில்கள்
ஈடுபட ஊக்கம் தருதல் (Incentives) அ
சியம். அப்போதுதான் தொழில்கள் அ
விருத்தி யடையும். கடும் உழைப்புக்கு
தக்க பலன் கிடைக்க வேண்டும். பலன் இ

## டெஹ்ரான் – டில்லி – டாக்கா



தால்தான் தைரியமாகத் தொழிலில் இறங்கி ஆபத்துக்களுக்குத் (risk) துணிந்து தொழிலைப் பெருக்கி, அதன் மூலம் நாட்டின் வளத்தைப் பெருக்கலாம். இதற்கெல்லாம் இப்போது உள்ள போக்கு — கலப்புப் பொருளாதாரக் கொள்கை, சர்க்காரே எல்லாத் தொழிலையும் நடத்த வேண்டும் என்ற ஆசை, லாபம் என்று பேசினாலே ஏதோ பூச்சாண்டி வருகிறது போன்ற ஒரு பிரமை, போன்றவை தொழில் அபிவிருத்திக்குத் தடைகள் போலவே செயல்படுகின்றன. இதனால் நகரத்தார் சமூகம் மட்டுமல்ல, எல்லாச் சமூகத்தினரிடமுமே காணப்பட்ட பரம்பரைச் சிறப்புக் குணங்கள் குறைந்து, மறைந்து விடுமோ என்று பயப்பட வேண்டியிருக்கிறது.

இதுபற்றி நாம் கவலை கொள்ளத்தான் வேண்டும். அரசின் ஆதரவு இல்லையென்றால் வாணிபமும், தொழிலும் செழிக்காது. "நகரத்தார் வரலாறே" இதற்குச் சான்று கூறுகிறது. தொண்டை மண்டலத்துக் காஞ்சி நகரிலிருந்து நகரத்தார் சோழ நாட்டுப் புகார் நகரம் சென்றதும், அங்கிருந்து பாண்டி நாடு சென்றதும் அரசின் ஆதரவு குன்றியதால்தான் என்று இப்புத்தகத்தில் ஆசிரியர் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார். பத்தாம் நூற்றாண்டில் கண்ட உண்மை இருபதாம் நூற்றாண்டுக்கும் பொருந்தும்.

செல்வத்தைப் பகிர்ந்தளித்தல், சமூக முன்னேற்றம் என்றெல்லாம் இப்போது நாம் அடிக்கடி கேள்விப்படுகிறோம். இப்போதெல்லாம் தனவணிகர்கள் சமூக விரோதிகள் என்ற பொருள்படவே பேசப்படுகிறது. இது எவ்வளவு தவறு என்பதை வரலாறு கூறுகிறது. தருமகர்த்தா முறையைக் கடைப்பிடித்தவர்கள் நகரத்தார். முற்காலத்தில் கோவில் கட்டுதல், தர்ம சத்திரம் கட்டுதல், அன்னதானம் போன்ற செயல்கள் சமூக முன்னேற்றத்துக்காகச் செய்ய வேண்டிய காரியங்களாகக் கருதப்பட்டு வந்தன. நகரத்தார் இத்துறையில் குன்றின் மேலிட்ட விளக்கென அறம் செய்துள்ளனர். சமீப காலத்தில் கல்லூரிகள் ஸ்தாபிப்பதும், பள்ளியமைப்பதும், ஆஸ்பத்திரிகள் நிறுவுவதும் அறப் பணிகளாகக் கருதப்பட்டன, இத்துறையிலும் அண்ணாமலை சர்வகலாசாலையும், காரைக்குடி கல்வி நிறுவனங்களும், இன்னும் பல ஸ்தாபனங்களும் நகரத்தார் சமூகத்தின் தர்ம சிந்தனையைக் காட்டுகின்றன. சமீப காலங்களில் தொழில் நிறுவனங்களில் தொழிலாளர் நலனை மேன்மேலும் அதிகமாக மதிப்பது சமூகப் பணி என்று கருதப்படுகிறது. இதையும் தொழில் துறையில் அவர்கள் செய்து கொண்டு வருகிறார்கள். கருத்துக்கள் எப்படி மாறினாலும் ஒன்று மட்டும் மாறாது. மக்களின் பொது வாழ்க்கைத்தரம் உயர வேண்டுமானால், வறுமை ஒழிய வேண்டுமானால், நாடு தொழில் மயமாக வேண்டும். உற்பத்தி பெருக வேண்டும். வாணிபம் செழிக்க வேண்டும்; செல்வம் பெருக வேண்டும். வறுமைக்கு எதிர்மறை செல்வம். வறுமைக்கு மருந்து செல்வம்தான். அதைக் கொண்டுதான் வறுமையை அகற்ற முடியும். இதை நாட்டின் நலனில் கருத்துள்ள யாவரும் — அரசாங்கம் உட்பட — யாவரும் உணர்ந்து அதற்கு இசைவாக நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

நகரத்தார் சமூகம் செய்யும் காரியங்கள் மகத்தானவை. இந்தப் பெருமையை "நகரத்தார் வரலாறு" எடுத்துக் காட்டுகிறது. வானதி பதிப்பகத்தாரையும் ஆசிரியர் சேஷாத்திரி சர்மாவையும் பாராட்டி, இந்நூலை * வெளியிடுகிறேன்.

---

*கிடைக்குமிடம்: வானதி பதிப்பகம், சென்னை-17; விலை: ரூ. 6-00.

---

இந்தப் போட்டியில் காரின் வேகம் முக்கியமானதல்ல. போட்டியில் முதலில் வந்த கார் பரிசைப் பெறும் என்பதுமல்ல. போட்டியை நடத்துபவர்கள் சில வரம்புகளை வகுத்திருந்தனர். அதன்படி குற்றங்கள் செய்யாமல் வந்த முதல் ஆறு கார்களுக்கிடையே பரிசுத் தொகையான 7500 டாலர்களைச் சமமாகப் பகிர்ந்தளிப்பதே நோக்கம்.

இரானின் தலைநகரமான டெஹ்ரானிலிருந்து தொடங்கி ஒன்பது நாட்கள் பயணம் செய்து, நவம்பர் 15ந் தேதி கிழக்குப் பாகிஸ்தானில் உள்ள டாக்காவில் முடிவடைந்த கார்கள் போட்டி, ஆசியாவிலேயே மிகப் பெரிய கார்கள் போட்டியாகும். ஐ.நா.வைச் சேர்ந்த 'எகாஃபே' (ECAFE)யின் ஆதரவில் நடைபெற்ற இப்போட்டியில் கலந்து கொண்ட கார்க் குழுவினரின் எண்ணிக்கை அறுபத்திரண்டு. தூரம் 6,800 கிலோமீட்டர்.

இந்தப் போட்டியில் லாவோஸ் பிரதம மந்திரியின் இருபத்தெட்டு வயது மகள் இளவரசர் பன்னா சொவன்னா பூமாவும் அவருடைய உறவினரும் கலந்து கொண்டனர். அவர்கள் ஓட்டிய கார் ஜெர்மானிய போக்ஸ் வாகன்.

போட்டியில் வயதான மனிதர் சிங்கப்பூரைச் சேர்ந்த சின் செங்க். வயது அறுபத்தொன்று. இவருடைய காரும் பழசு. 1958 மாடல் ஷெவர்லே. மிகவும் இளவயதுக்காரர், பாகிஸ்தானில் படிக்கும் கல்லூரி மாணவர். வயது பதினெட்டு.

இந்தப் போட்டியில் ஏற்பட்ட விபத்தில் உயிரிழந்தவர்கள் இருவர். காபூலில் ஒரு பெண்ணும் பெஷாவரில் ஒரு பையனும் காரில் அடிபட்டு இறந்து போனார்கள்.

இந்தப் போட்டி நடத்தப்படுவதின் நோக்கம் முக்கியமான நகரங்களைப் போக்குவரத்துக்குரிய நல்ல பாதைகளின் மூலம் சீக்கிரம் இணைக்க ஊக்கம் அளிப்பதே. பொருளாதார, வியாபார முன்னேற்றத்துக்கென ஆசியத் தலைநகர்களையும், துறைமுகங்களையும் இணைக்கும் பணியில் ஈடுபட்டுள்ள ஐ.நா.வின் கிளை ஸ்தாபனம் எகாஃபே இந்தப் போட்டியைச் சென்ற வருடம்தான் தொடங்கியது. இது இரண்டாவது போட்டி.

இந்தப் போட்டியில் முதலாவதாக வந்த பெருமை இந்தியக் குழுவையே சாரும். தோராப்ஜி காரை ஓட்டிய நாசிர் ஹுசேனும் அவரது சகாக்களும் முதலில் வந்தனர். அவர்கள் எழுபது தவறுகளே புரிந்தனர்.

இரண்டாவதாக 110 தவறுகள் இழைத்த லாவோஸ் குழு வந்தது. மூன்றாவதாக வந்தது, 210 தவறுகள் இழைத்த பாகிஸ்தானைச் சேர்ந்த முகம்மது சஜுவுல்லாவின் குழு.

— என். ராஜாமணி

படையுடன் லங்கைத் தீவில் இறங்கி அரக்கர்களை அழித்து உம்மை வெற்றியுடன் திருப்பிக் கொண்டு போவார்கள். ஒரு சந்தேகமும் படாமல் இருப்பீராக'' என்றான் மாருதி.

''இங்கே எங்கேயாவது நீ ஒரு நாள் இருந்து தங்கி இளைப்பாறித் திரும்புவது நல்லதல்லவா?'' என்றாள். மறுபடியும் சீதை, ''உன்னைப் பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடைந்தேன். என் துக்கத்தை மறந்தேன். மறுபடியும் நீ மறைந்ததும் நான் துக்கத்தில் மூழ்குவேன். நீ இந்தப் பெருங் கடலைத் தாண்டி வந்தாய். ராமனும் அவருடைய சேனையும் எப்படி இந்தக் கடலைத் தாண்டப் போகிறார்கள்? இதைப் பற்றி உன் யோசனை என்னவோ?'' என்று மறுபடியும் சந்தேகப்பட ஆரம்பித்தாள்.

''தேவி! நீர் ஒன்றும் ஐயப்பட வேண்டாம்! நான் ஒருவன் தான் கடலைத் தாண்டக் கூடியவன் என்று எண்ணினீரோ? அங்கிருக்கும் வானரர்கள் எல்லோரும் என்னை விடச் சாமர்த்திய சாலிகள். சுக்ரீவன் மட்டுமல்ல. அவன் படையில் உள்ளவர்களில் பலர் பூமண்டலம் முழுவதும் பறந்து திரியக்கூடிய சக்தி கொண்டவர்கள். இந்தக் கடல் ஒரு பெரிதல்ல. என்னைவிடப் பலசாலிகளும் சாமர்த்தியசாலிகளும் ஆகாய மார்க்கம் செல்பவர்களும் ஆயிரக்கணக்காக எங்களில் இருக்கிறார்கள். ஒரு சந்தேகமும் படவேண்டாம். உண்மையில் எல்லோருமே என்னைத் தோற்கடிப்பார்கள். எல்லாரையும் விடப் பலசாலியையா தூதனுக அனுப்புவார்கள்? குறைந்தவனைத் தேடி முதலில் அனுப்பினார்கள். அங்கே இருக்கும் வானரர்



களில் பலர் என்னை மிஞ்சியவர்கள். தேவி! துக்கத்தை விட்டுச் சந்தோஷமாக இருப்பீராக. என் முதுகின் பேரில் இரு ராஜ சிம்மங்களையும் ஏற்றிக் கொண்டு வரப் போகிறேன். வந்து இந்த நகரத்தைப் பாணங்களாலேயே பாழாக்குவார்கள்; ராவணனைக் குலத்தோடு அழிப்பார்கள். உமக்கு மங்களம்! எதிர்பார்த்த வண்ணமாக இருப்பீராக! துயரக் கடலைத் தாண்டி அக்கரை ஏறுவீர். துக்கமெல்லாம் ஒரு கனவாகும். வெகு நாட்களில்லை. இரு ராஜகுமாரர்களும் வில் பிடித்து லங்கை வாயிலில் நிற்பதைப் பார்ப்பீர். இந்த அரக்கர் கூட்டம் அழிவதைப் பார்ப்பீர். வானர சேனை வந்து குதித்துக் கூத்தாடி லங்கையைப் பாழாக்குவதைப் பார்ப்பீர். செய்தி தெரிந்த பின் ஒரு கணமும் சும்மா இருக்க மாட்டார்கள். நான் போய்ச் சொல்லுவதுதான் தடை; உடனே கிளம்பி வருவார்கள். தைரியமாக இருப்பீராக.'' இவ்வாறு சொல்லித் தேவியைத் தலை வணங்கி நமஸ்கரித்துப் புறப்பட்டான்.

''நான் உயிருடன் இருக்கிறேன் என்று ராம லக்ஷ்மணர்களுக்குச் சொல்லுவாயாக. காரியங்களைத் துரிதப்படுத்துவாயாக. மங்களம்'' என்றாள் சீதை.

அஞ்சனா தேவியின் வீர குமாரன், ஜானகியின் சோகத்தைத் தீர்த்த மகானுடைய அடிபணிவோமாக!

(தொடரும்)

# ராஜாஜி



ராஜாஜி – எங்கள் ராஜாஜி
நாட்டுக் கேற்ற நல்ல தலைவர் ராஜாஜி

குட்டிக் குட்டிக் கதைகளைக்
கூறிப் புத்தி புகட்டுவார்.
எட்டுத் திக்கும் போற்றிடும்
இணையில் லாத உத்தமர்.
(ராஜாஜி)

கண்ணன் சொன்ன வழிகளைக்
காட்டி இன்பம் ஊட்டுவார்.
நன்கு தமது வாழ்விலும்
நடந்து தினமும் காட்டுவார்.
(ராஜாஜி)

பழமை யான கதைகளைப்
பழகு தமிழில் சொல்பவர்.
அழகு சொட்டும் முறையிலே
அவற்றைப் படிக்கச் செய்பவர்.
(ராஜாஜி)

அடிமை வாழ்வை நீக்கவே
அல்லும் பகலும் உழைத்தவர்.
விடுத லைப்போர் செய்தவர்.
வெற்றி தேடித் தந்தவர்.
(ராஜாஜி)

தொண்ணூ றாண்டைக் கடந்தவர்.
துறவி போல வாழ்பவர்.
எண்ணம், பேச்சு, செயலிலே
என்றும் தூய்மை உடையவர்.
(ராஜாஜி)

நாடும், மொழியும், மக்களும்
நன்கு வாழ வாழ்பவர்.
நீடு வாழ்க, நலமுடன்
நித்தம் வாழ்க, வாழ்கவே!
(ராஜாஜி)



— அழ. வள்ளியப்பா —

# சொர்க்கலோகத்தில் துக்ளக்!

**இந்திரன்:** என்ன நாரதரே! விவேகா பைன் ஆர்ட்ஸ் குழுவினரின் ''என்று தணியும் இந்த சுதந்திர தாகம்?'' எப்படி? கொஞ்சம் விமரிசிப்போமா?

**நாரதர்:** 'சோ'விடம் நாம் எதை எதிர்பார்ப்பது வழக்கமாகி விட்டதோ அதையே இந்நாடகத்திலும் காண்கிறோம். முந்திய நாடகத்தில் வந்த துக்ளக் இந்த நாடகத்தில் நல்லதம்பியாக உருமாறித் தேவலோகத்துக்கு வந்துவிட்டாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

**வால்மீகி:** சோவின் நகைச் சுவை எப்போதுமே தேங்காய் உடைப்பது போல்தான் இருக்கும்; இதிலும் அப்படித்தான். நாருக்கு என்பதைக் காண முடியாது.

**இந்திரன்:** ஆனாலும் நாடகம் காட்சிக்குக் காட்சி ரசிக்கும்படியாகத்தானே இருந்தது? அதுவும் கடைசிக் காட்சி கனம் சேர்த்து, இதை ஒரு சாதாரண நாடகம் என்ற நிலையிலிருந்து வெகுவாக உயர்த்தி நல்ல பெயர் சம்பாதித்துக் கொடுத்திருக்கிறதல்லவா? மானிடர்கள் பூலோகத்தில் செய்யும் தவறுகளுக்காக காந்தியடிகள் இங்கு உண்ணாவிரதம் இருப்பதாகக் காட்டுவது உள்ளத்தை உருக்கவில்லையா?

**யமன்:** அது ரொம்ப உண்மை; ஏதடா நாடகத்தில் யமனை ரொம்ப அசடாகக் காட்டுகிறார்களே என்று பயந்தேன். கடைசியில் எல்லாமே ஒரு நல்ல நோக்கத்துக்காக நாரதருடன் நான் சேர்ந்து நடத்தும் நாடகமாக முடிந்தது மன நிம்மதியை அளித்தது.

**மகாவிஷ்ணு:** அசடாக நடித்தாலும் அபாரமாய் நடித்தார் எமன் வேஷம் போட்ட நீலு. சமர்த்தாக, ஜனாதிபதியாக, சொன்னபடி கேட்டு அவர் கையெழுத்துப் போட்டது ரொம்ப ஜோர்! துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்யும் என்னையே நாடகத்தில் அசரவைத்து விட்டாரே நல்லதம்பி! விஷ்ணுவே அவர் வெற்றுப் பேச்சில் மயங்கி விடுவது மிக நல்ல கட்டம்!

**நாரதர்:** நாடக பாத்திரங்கள் ஒன்றுக்கொன்று சளைக்காமல் நாடகம் விறுவிறுப்பாக அமைய உதவியிருக்கின்றனர். அவர்களுள் பூலோகத்து நல்லதம்பி பாத்திரம் மறக்க முடியாதது. ஜனநாயக சோஷலிஸத்தை தேவலோகத்திலும் செல்லுபடியாக்க முயன்ற அவன் திறமை அபாரம். நல்லதம்பியாக நடித்த ராஜகோபாலுக்கு நாடக அரங்கில் ரஸிகப் பெரு மக்களின் வரவேற்பு அமோகமாக இருந்ததே. முதல்தர நடிப்புத்தான். பாரதியாராக வந்த வி. ஆர். எஸ்ஸும் சக்கைப் போடு போட்டார்.

**இந்திரன்:** ஏன், நாரதருக்கு இல்லையா அந்த வரவேற்பு? நாடகத்தின் பிரதான பாத்திரம் அவர் தானே? 'சோ'வை எப்படி மறந்தீர்?

**நாரதர்:** மறக்கவில்லை. என்னை நானே பாராட்டிக் கொள்ளக் கொஞ்சம் தயங்கினேன். 'நாரதர் கலகம் நன்மையில் முடியும்' என்று எனக்கு ஏற்பட்டிருக்கும் பண்டைய புகழுரையை நாடக நாரதர் நன்கு நிலைநாட்டி விட்டார். பளிர் பளிர் என்று அவர் உதிர்க்கும் ஹாஸ்ய வெடிகளும், கலகத்துக்கு வித்திடும் புத்திசாலித்தனமான கருத்துகளும் பாராட்டும்படியிருந்தன.

**விசுவகர்மா:** 'சோ'வின் மற்ற நாடகங்களை விடக் காட்சி ஜோடனைகளுக்கும் கிரீடம், ஆபரணம், ஆயுதம் முதலிய தேவலோக உபகரணங்களுக்கும் இந்த நாடகத்தில்தான் அதிக இடம். நிறையச் செலவு பண்ணியிருக்கிறார்கள்.

**பாரதியார்:** என் பாட்டையே தலைப்பாகக் கொண்ட நாடகத்தின் கடைசிக் காட்சியில் எனக்கு இடம் அளித்து, பாரத நாட்டைப் பற்றி இப்போதைய என் கருத்தை எடுத்துச் சொல்ல இடம் அளித்திருப்பதில் எனக்குப் பெருமிதமே!

**காந்திஜி:** கடைசிக் காட்சியை ஆசிரியர் மிகவும் திறமையாக அமைத்துவிட்டார். ஆரம்பக் காட்சிகளில் அடுக்கடுக்கான ஹாஸ்யங்களும் சமத்காரமான உரையாடல்களுமே இருந்தன. நாடக இயலைக் காணமுடியவில்லை. இத்தனைக்கும் சேர்த்து வைத்துக் கடைசிக் காட்சி நாடகத்துக்கே முதல்தரமான காட்சியாக அமைந்து விட்டது. அதில்தான் நாடகத்தின் ஜீவநாடியே இருக்கிறது. என் இளம் பிராயத்தில் நான் ''அரிச்சந்திரன்'' நாடகத்தைப் பார்த்துத்தான் சத்தியத்தின் மகிமையை உணர்ந்து அதையே என் வாழ்வின் லட்சியமாகக் கொண்டேன். அதே மாதிரி இந்நாடகமும் மக்களுக்குப் பயனளிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

— காந்தன்

## நாடக மேடை



# வெற்றிக்கு மேல் வெற்றி (V.V.) குமார்!

உலக 'பாஸ்ட் போலர்'களான லார்வுட், லிண்ட்வால், மில்லர், ஹால் போன்றவர்கள் இன்னும் இந்தியாவில் தோன்ற வில்லையே ஏன் என்பது பற்றிய கேள்வி. இருக்கும் நல்ல பந்து வீச்சு நிபுணர்களை இந்திய கிரிக்கெட் நிர்வாகிகள் பயன்படுத்திக் கொள்கிறார்களா என்பது பிரச்னை. கூக்ளி, (Googly) 'லெக் பிரேக்'குகள் மூலம் அரிய சாதனைகளைக் காண முடியும் என்பதைச் சமீபத்தில் கேரளத்தில் நிகழ்ந்த ரஞ்சித் கோப்பை பந்தயத்தில் நிரூபித்திருக்கிறார் இளைஞர் வி. வி. குமார். அவரிடம் நேரில் சென்று அவரது அனுபவங்களைக் கண்டறிவோம்.

கேள்வி: தலைச்சேரியில் ரஞ்சித் கோப்பைப் பந்தயத்தில் நீங்கள் புதிய ரிகார்டு ஏற்படுத்தியது கண்டு மகிழ்ந்தோம். உங்கள் புதிய ரிகார்டினைப் பற்றித் தங்கள் மனநிலையைத் தெரிந்துகொள்ளலாமா?

பதில்: திரு வி. எஸ். நாயுடு தம் அபார சாமர்த்தியத்தினால் 295 விக்கெட்டுகளை ரஞ்சித் கோப்பைப் பந்தயங்களில் எடுத்து, ஒரு மகத்தான ரிகார்டை ஏற்படுத்தினார். திரு வி. எஸ். நாயுடு பந்து வீச்சில் பிடை பாவி ஆசாமி! அசகாய சூரர். அவரது அபார சாதனையை நான் 306 விக்கெட்டுகளை எடுத்து முறியடித்துள்ளேன். இந்த அரிய செயலைச் செய்ததில் எனக்கு நியாயமான மகிழ்ச்சி ஏற்படுகிறது. பெரிய கௌரவம் கிட்டியதாகப் பெருமைப் படுகிறேன்.

கேள்வி: இந்த மகிழ்ச்சிகரமான வேளையில் கசப்பையும் நினைவூட்ட வேண்டியிருக்கிறது. 1960ல் பாகிஸ்தான், 1961-62ல் இங்கிலாந்து டெஸ்ட் பந்தயங்களில் கலந்து கொண்ட உங்களை அதன் பிறகு சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லையே?

பதில்: டெஸ்ட் பந்தயங்களில் கலந்து கொள்ள எல்லா ஆட்டக்காரருக்கும் ஆசை இருப்பது இயல்புதானே? 1962ம் ஆண்டில் பம்பாயில் இங்கிலாந்து — இந்திய டெஸ்ட் பந்தயத்தின்போதுதான் என் வாழ்க்கையில் கசப்பான சம்பவம்—மணிக்கட்டில் கோளாறு ஏற்பட்டது. தேர்ந்த டாக்டர்களின் சிகிச்சையினால் பூரண குணமடைந்தேன்.

கேள்வி: அதைக்காரணம் காட்டியே....

பதில்: அதெப்படி முடியும்? அதன் பிறகு பல மாட்சுகளில் கலந்து கொண்டு பல பௌலிங் சாதனைகளைச் செய்து காட்டியும் எனக்கு டெஸ்ட் சான்ஸ் வரவில்லை... நான் டெஸ்ட் தேர்வாளர்களைக் குறை சொல்ல முன்வரவில்லை. என் நம்பிக்கை இன்னும் தளர்ந்து விடவில்லை. எதிர்காலத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு...!

(குமாரின் மனைவி லக்ஷ்மி கையில் தேநீர்க் கோப்பையோடு வருகிறார்)

குமார்: ஸார்! என் மனைவி லட்சுமி நான் ஆடற மாட்ச்செல்லாம் வந்து பார்த்துக் குறை நிறை யெல்லாம் சொல்லி சொஜந்து வாங்கிவிடுவாள். பெரிய கிரிடிக்!

கேள்வி: உங்கள் ஆட்டத்தை மட்டுமல்ல;உங்களையும் சரியாகக் கவனித்துக் கொள்ளுகிறார் உங்கள் மனைவி என்று நன்றாகத் தெரிகிறது. முன்னைவிட நீங்கள் ஒல்லியாக இளமைத் தோற்றத்துடன் இருப்பதன் ரகசியமும் புரிகிறது! சரி, உங்களுக்குக் குழந்தைகள் எத்தனை?

பதில்: இரண்டும் பெண்கள். மூத்தவள் அனுராதா வித்யா மந்திரில் படிக்கிறாள். டான்ஸ் நன்றாகத் தெரியும். அடுத்த பெண் குழந்தை சுஜாதாவுக்கு ஐந்து மாதம்.

கேள்வி: உங்கள் உத்தியோகம் உங்கள் கிரிக்கெட் பயிற்சிக்குத் தோதாயிருக்கிறதா?

பதில்: அடையாறு ஸ்டேட் பாங்கில் ஏஜண்ட். ஸ்டேட் பாங்க் தலைமையகத்திலிருந்தவரை மாலையில் கிரிக்கெட் ஆட முடிந்தது. இப்பொழுது பாங்கியின் வேலை நேரம் காலை 8லிருந்து 11, மாலை 3லிருந்து 6 வரை. ஆகவே அதிகாலையில் கிரிக்கெட் 'பிராக்டீஸ்'க்குப் போகிறேன்.

கேள்வி: உங்கள் கிரிக்கெட் வாழ்க்கையில் என்னால் மறக்க முடியாத சம்பவம் ஏதாவது சொல்லுங்களேன்.

பதில்: 1959ம் ஆண்டில் கோபாலன் கோப்பைக்காகச் சென்னைக் குழுவுக்கும் இலங்கைக் குழுவுக்கும் மாட்ச் நடந்து கொண்டிருந்தது. இலங்கையின் 'ஸ்டார் பாட்ஸ்மன்' குணசேகரா, அடிக்கடி கோட்டைத் தாண்டிக் குதித்து வந்து கொண்டிருந்தார். விக்கட் கீப்பர் சீனிவாசனிடம் 'கோடு தாண்டும்' குணசேகராவைப் பற்றிக் கூறி, அவரை முன்னுக்கு இழுத்து விட்டால் 'அவுட்'டாக 'ஸ்டம்பு அவுட்' செய்ய வேண்டும் என்று திட்டமிட்டு, அதுப்படியே முதலில் நாலு பந்துகளைச் சாதாரணமாக வீசினேன். ஐந்தாவது பந்தில் அவரைக் கோடு தாண்டி முன்வரும்படி இழுத்தேன். நினைத்தபடியே விக்கெட் கீப்பர் சீனிவாசனும் அவரை 'ஸ்டம்ப் அவுட்' செய்து விட்டார். ஒருவரைத் திட்டமிட்டு 'அவுட்'டாக்க முடியும் என்பதை இச்சம்பவம் நிரூபித்தது.

கேள்வி: உங்கள் கிரிக்கெட் வெற்றிக்கு உறுதுணையாக நின்றவர் யாரேனும் உண்டா?

பதில்: ஓ! ஸ்டேட் பாங்கியின் முன்னாள் சேர்மன் திரு எஸ். ராமானந்த ராவ் கிரிக்கெட்டிலும், வாழ்க்கையிலும் முன்னேறுவதற்கு எனக்கு ஊக்கமும் உற்சாகமும் தந்தவர். செய்நன்றி மறப்பது அழகல்லவே!

பேட்டி: குண்டுமணி



அத்தியாயம் 17

முன்னதாகவே தந்தி கொடுத்திருந்தபடி அந்த ஹோட்டலில் ஓர் அறையை மட்டும் ரிஸர்வ் செய்து வைத்திருந்தார்கள். அது ஒருவர் மட்டுமே தங்கக் கூடிய அறை. இன்னொருவருக்கு இடம் வேண்டுமானாலும் ஒரு சிறு தொகை கூடக் கட்டினால் போதும். அதாவது இடத்துக்கு மட்டும்தான்; அதிகப்படி வசதிக்கு வழியில்லை. அது சரிப்படாது என்றால் வேறு ஹோட்டலைத் தேடிப் போக வேண்டியதுதான். இந்த ஹோட்டலில் இடமே யில்லை. பாஸ்கரனுக்கு என்ன செய்வ தென்று புரியவில்லை; தயங்கினான்.

''தயக்கம் என்ன? இருக்கிற அறையே போதுமே. அதுக்குள்ள எக்ஸ்ட்ரா சார்ஜைக் கட்டிப்புடுவோம்'' என்று அவன் தயக்கத்தைப் போக்கினாள் யாமினி.

# காணிக்கை

ஆர்வி

எதையும் சட்டென்று அவள் முடிவு செய்வது பாஸ்கரனுக்குப் பிடித்திருந்தது. அவனால் அப்படி முடிவதில்லை. சரியோ, தவறோ அவளிடம் வீண் தயக்கமோ, சஞ்சலமோ காணப்படாதது அவனுக்குத் தெம்பைத் தந்தது.

''நீ கட்டிலில் படுத்துக் கொள்ளலாம். எனக்குத்தான் படுக்கை இருக்கிறதே!'' என்று சொன்னான் பாஸ்கரன்.

''வேண்டாம்; எனக்கு அந்தப் படுக்கையே போதும். கட்டில் வேண்டாம்.''

''அதுவும் சரி. அதிலே பிளாங்கெட் போர்வை எல்லாம் இருக்கு.''

மறுபடியும் ரிசப்ஷனுக்குப் போய், பணத்தைக் கட்டி, ஹோட்டல் ரிஜிஸ்தரிலும் கையெழுத்துப் போட்டுவிட்டு, அந்த அறைக்கு வந்தார்கள். ஹோட்டல் பையன் கொண்டு வந்த பாலைப் பருகிவிட்டு, இருவரும் தங்கள் படுக்கைகளில் படுத்துக் கொண்டார்கள். இருவருக்குமே அந்தத் தனிமையில் கூச்சமாகத்தான் இருந்தது. விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

''பாவம், என்னால்தான் உங்களுக்கு இத்தனை சங்கடமும். இல்லாட்டா சௌகரியம் போல் இருப்பீர்கள். இல்லையா?''

''இதை விடவா?'' என்றான் பாஸ்கரன். பிறகு சற்றுப் பொறுத்து, ''உனக்குத்தான் சங்கடமாக இருக்கும். அசௌகரியமாய் இருக்கும். அதை இப்படி மாற்றிச் சொல்றே!'' என்றான்.

யாமினி பேச்சை வளர்த்த விரும்பாமல் படுக்கையிலிருந்த போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டு, கண்களை மூடிக்கொண்டாள். கண் முன்னே சாயங்காலம் அவனைச் சந்திக்கப் புறப்பட்டதிலிருந்து நடந்ததெல்லாம் நிழற்படம் போல் ஓடிக் கொண்டிருந்தன. நடுவில் அந்தச் சோபனா ஜோஷி யார் என்று தெரிந்து கொள்ளவில்

லையே என்று நெஞ்சுக்குள்ளே ஒரு சின்ன உறுத்தல். ஆனால் அதைப்பற்றிப் பேச்சு எடுக்க இது நேரமில்லை. 'வண்டி ஓட்டி வந்தது களைப்பாக இருக்கும்; தூங்கட்டும்' என்று விட்டு விட்டாள்.

**ம**றுநாள் காலையில் பாஸ்கரன் கண் விழித்து எழுந்தபோது அவள் கண்ணாடி முன் நின்று கூந்தலை வாரிப் பின்னிக் கொண்டிருந்தாள். இருள் பிரியுமுன்னே அழகாகப் பூத்த நறுமலர் போல அவளுடைய பிம்பம் காட்சி யளித்தது. இதழ்க் கடையில் புன்னகை நெளிய அவள் பாஸ்கரன் எழுந்து விட்டதை யறிந்து திரும்பினாள்.

"குளியல் எல்லாம் முடிஞ்சாச்சு போலிருக்கே!"

"பின்னே! மணி ஆறு ஆகப் போகிறதே. கோயிலுக் கெல்லாம் போக வேண்டாமா? நீங்களும் சீக்கிரமா தயாரானால் தேவலை."

"இதோ, வந்துட்டேன், பத்து நிமிஷத்துலே!" என்று வேகமாக எழுந்தான் அவன்.

காலை டிபனை முடித்துக் கொண்டு ஆறே முக்கால் மணிக்கெல்லாம் அவர்கள் வண்டியில் ஏறிக் கோயிலுக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

"இந்த டிரஸ்ஸைக் கொண்டே 'மானேஜ்' செய்துட்டே போலிருக்கே!"

"வேறே என்ன செய்யறது? பார்க்கப் போனால் இதுவும் புதிசுதானே!"

"அப்புறம் எதெல்லாம் புதிசு?"



''இந்த அநுபவமெல்லாம்தான். இத்தனை காலே வேளையிலே குளிச்சுக் கிளிச் கூட்டுக் கோயிலுக்குப் போறதெல்லாம் தான் !''

''யூ ஆர் க்விக் விட்டெட்! அப்படிப் பேசறது நன்னாத்தான் இருக்கு.''

யாமினி இந்தப் புகழ்ச்சிக்கெல்லாம் அசையவில்லே. வெகு இயற்கையாகவே இருந்தாள். வெளிநாட்டுப் பெண்களைப் போல இதற்காக அவள் நன்றி சொல்லவில்லே.

சுவாமி தரிசனமெல்லாம் செய்து விட்டு அவர்கள் பிராகாரத்தைச் சுற்றி வருகிறபோது சற்றுப் பின்தங்கி நடந்து வந்த யாமினியைக் கவனித்தான் பாஸ்கரன். தாழம்பூ மடல் போல் இருந்த அழகிய நெற்றியில் அவள் கேரளத்து மங்கையரின் பாங்கிலே சந்தனத்தைத் தீற்றிக் கொண்டு, குங்குமமும் இட்டிருந்தது அப்படியே அவன் நெஞ்சை ரவிவர்மா ஓவியம் போல் அள்ளிக் கொண்டு போயிற்று. அந்த நெடிய பிராகாரத்தில் அவனோடு சேர்ந்து நடந்து வர அவள் கூச்சப்படுவதை அவன் உணர்ந்து கொண்டான். காரணம் புரிந்தது. தூண்களிலிருந்த சிற்பங்களைக் கவனிக்காமலே அவள் விட்டேற்றியாக, தலே குனிந்து நடந்து வந்தாள்.

முன்னால் சென்ற பாஸ்கரன் கடைசிப் பகுதியில் அவள் வரும் வரையில் காத்திருந்தான்.

அவள் வந்ததும், ''ரொம்பப் புகழ்றேன்னு நினைச்சுக்காதே. உன் கண்ணும் பார்வையும் ரொம்பச் சூடிகை. எதிலுமே நீ சட்டுனு ஒரு 'முடிவு' எடுத்துக்கிறது எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு !''

காற்றிலே மலர் அசைவது போல இருந்தது அவள் சிரித்த பாணி.

''அடேயப்பா, எத்தனை 'ரொம்ப'! என்னத்துக்காக இப்ப இது? நேத்திக்கு ராத்திரி ஹோட்டல்லே செய்த பெரிய தப்பை மறைக்கறதுக்கா?'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாள் அவள்.

அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அப்படியே திகைத்து நின்று விட்டான்.

''நேத்து ராத்திரியா? ஹோட்டல்லேயா? பெரிய தப்பா ?''

''நானா, செய்தேனா — எப்போ, எப்படின்னு ஒரே கேள்விக் கணையாத் தொடுத்தால் ? இப்படி யெல்லாம் கேட்டால் அந்தத் தப்பைத் தெரியாமெ செய்திருக்கிறதாத்தானே அர்த்தம் ?''

பாஸ்கரன் ஆடிப் போய் விட்டான்.

'' யாமினி, ப்ளீஸ், நீ என்ன சொல்லறே ?''

''ரிஸப்ஷன் கவுண்டரிலே ஒரு ரிஜிஸ்தரிலே நீங்க கையெழுத்துப் போட்டதாவது நினைவு இருக்கோ, அதுவும் இல்லேயோ ?''

''ஆமாம், போட்டேன்.''

''அதிலே என்ன எழுதியிருந்ததுன்னு படிக்கப் பார்த்தேளோ ?''

'' பார்த்தேனே. அதிலே நம்ம ரெண்டு பேர் பேரையும்....''

'' நீங்க படிக்கப் பார்க்கல்லே, நான் சொல்றேன். படிக்கப் பார்த்திருந்தால் அப்ப வேணும்னு தெரிஞ்சே செய்திருக்கிறதாத்தான் சொல்லணும்.''

'' என்ன விஷயம்னே எனக்குப் புரியல்லியே....''

''அது எப்படிப் புரியும் உங்களுக்கு, அவ்வளவு பெரிய தப்பு?''

பாஸ்கரன் முகம் வாடிப் போய் விட்டது, ஒரு நொடியில்.

''நீங்க படிச்சுப் பார்க்கல்லே. அதிலே மிஸஸ் அண்ட் மிஸ்டர் பாஸ்கர்னு எழுதியிருக்கு. நீங்க உங்க அமெரிக்கன் ஸ்பீடாலே அழுத்தமாக் கையெழுத்துப் போட்டு வைச்சிருக்கேள், சர்வ அலட்சியமா !''

''ஓ! அப்படியா எழுதியிருக்கான்? அதை அப்பவே சொல்லப்படாதோ ?''

''எப்படிச் சொல்றது, போட்டப்புறம்? ஒரே அறையிலே இருந்துண்டு எப்படி அப்புறம் திருத்தச் சொல்றது?''

''இதுதானே!'' என்று பெருமூச்சு விட்டான் பாஸ்கரன். அப்புறம்தான் நல்ல மூச்சு வந்தது. தன்னையறியாமல், தூக்கத்தில் தவறாக நடந்து கொண்டு விட்டோமோ என்று ஒரே மிரளலாக அவன் மிரண்டு போய் விட்டான்.

''ரூம் வாடகையைத் தவிர வேறே பணச் செலவு இல்லாமே, சந்தடி — கலாட்டா இல்லாமே, ஒருத்தர் சம்மதத்தையும் கேக்காமெ, இவ்வளவு சுலபமாத் தம்பதியாக்கி விடலாம் போலிருக்கே இந்த ஊரிலெல்லாம்!'' என்று சொல்லி விட்டு அவள் அருகில் வந்து மெல்லச் சிரித்தான்.

அவனுடைய மூச்சோடு பேச்சும் மணத்தது. சம்பங்கியோடு சந்தனமும் மணத்தது. அவன் பின்னால் அவள் மெதுவாக, நிதானமாக நடந்து வந்தாள். கோயிலே யெல்லாம் சுற்றிப் பார்த்து விட்டுக் கடைசியில் வண்டியில் வந்து ஏறிக் கொள்ளும் போது அவனைப் பார்த்து முல்லைப் பற்கள் தெரியச் சிரித்தாள்.

'' என்ன மறுபடியும் ?''

''ஹோட்டல் ரிஜிஸ்தர் தம்பதி சாஸ்திரோக்தமாகக் கோயிலுக்குப் போய் விட்டு வந்தாச்சு. அடுத்தபடி எங்கே ?''

"என்னைக் கேட்டால் இப்ப ஷாப்பிங் போகலாம்னு சொல்வேன்."

"போய் என்ன வாங்கறது? மோதிரமா?"

"ஏன், அதுவும் வேணும்னு வாங்கறது. அத்தோட புது டிரஸ் ஏதானும் வாங்கறது. உனக்கு வேண்டியது எதுவுமே கையிலே கொண்டு வரல்லியேன்னு சொல்றேன். ஊருக்குப் போகிற வரை யாவது வேறே மாத்து டிரஸ், அதுக்குப் பாக்ஸ்ஸுன்னு இருக்க வேண்டாமா?"

## மலை போன்ற பிரச்னைகளைத் தாங்குபவருக்கு...





## மலை போன்ற மாலையா ஒரு பிரச்னை?

"இந்த ஊருக்கு வந்ததுக்காக வேணுமானால் ஏதாவது ஒண்ணு வாங்கலாம். இன்னிக்கு ராத்திரி புறப்பட வேண்டியதுதானே!"

"புறப்படணும்னு என்ன கட்டாயம்? இப்ப லீவுதானே? கன்னியாகுமரி பார்க்க வந்தாப்பலே, கேரளாவையும் பார்த்துட்டு, போற போது குருவாயூருக்கும் போயிட்டுப் போயிடலாமே. உங்க சுசீலாவா அவள், அவளுக்கு ஒரு கடிதாசு, அவசியமானு ஊருக்கு ஒரு கடிதாசு இன்னிக்கே எழுதிப் போட்டுட்டாப் போச்சு!"

உண்மையிலேயே இப்போது யாமினி தான் திடுக்கிட்டுப் போனாள். ரொம்பப் பயங்கரமான யோசனை! சுசீலா என்ன நினைப்பாள்? ஊரிலும்தான் என்ன நினைப்பார்கள்? இதுவும் அமெரிக்காவா, என்ன?

அவளுடைய சிரிப்பும் கேலிப் பேச்சும் பாஸ்கரன் சொன்னதைக் கேட்டவுடனே போன இடம் தெரியாமல் போய் விட்டன. இதை எப்படிச் சொல்லத் தோன்றிற்று என்று அவனையே தீவிரமாகப் பார்த்தாள்.

"நான் ஏதாவது தப்பாச் சொல்லிட்டேனா?"

அவனுடைய களங்கமில்லா முகத்தையும் கபடமற்ற பேச்சையும் உணர்ந்தவளாக அவள் மெல்லத் தலையை அசைத்தாள். அவன் கேட்ட விதம் அவளை உருக்கிவிட்டது.

"ஊ.... ஹூ...ம்...."

"சரி; அதை அப்புறம் யோசிச்சுக்கலாம். முதல்லே ஷாப்பிங்கை முடிச்சுக்கலாம்."

யாமினி வாயைத் திறக்கவில்லை. பாஸ்கரன் சொன்ன யோசனை அவள் சிந்தையில் சுற்றிக் கொண்டேயிருந்தது. 'நான் ஏதாவது தப்பாச் சொல்லிட்டேனா?' என்று அவன் கேட்ட கேள்வி அவள் காதிலே முறையிட்டுக் கொண்டேயிருந்தது.

பாஸ்கரன் இஷ்டப்படிதான் எல்லாம் வாங்கினான். எல்லாம் அவளுக்குப் பிடித்தமாகத்தான் பார்த்து வாங்கினான். எல்லாம் அவசியமானதாகவே வாங்கினான். ஆனால் அவள் விருப்பத்தைக் கேட்காமல்தான் வாங்கினான். கேட்டிருந்தால் அவள் எதையுமே வேண்டாம் என்றுதான் சொல்லியிருப்பாள். அது அவனுக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் அவளை எதுவுமே கேட்கவில்லை.

### அத்தியாயம் 18

**யா**மினிக்கு ஒரு பக்கம் ரோசமாக இருந்தது. மற்றொரு பக்கம் பாவமாகவும் இருந்தது. அவளை வண்டியிலேயே உட்கார வைத்துவிட்டு, எங்கேயோ ஒரு கடைக்குள் நுழைந்தவன் கால் மணிக்கு மேலாகியும் வெளியில் வரவில்லை. அப்போது அவளுக்குக் கோபமாயும் இருந்தது.

ஆச்சரியம் என்னவென்றால் அந்தக் கோபத்தின் நடுவே பாஸ்கரன் அப்படி ஒன்றும் சொல்லத் தகாத யோசனை

யைச் சொல்லிவிடவில்லை என்ற எண்ணமும், அப்படி ஒன்றும் அது செய்யத்தகாத குற்றமாகி விடாது என்ற சமாதானமும் தோன்றியதுதான்.

நேரம் இன்னும் செல்லச் செல்ல, தன் மனம் அடியோடு மாறி விடுமோ என்ற அச்சம் அவளுக்கு அதிகரித்தது. இந்த அச்சம் உண்டாவதற்கு அவன் தானே காரணம் என்று கோபமும் அதிகரித்தது. இந்த அச்சம் கோபமெல்லாம் பாஸ்கரன் தலை தெரிகிற வரையில் தான். அருகில் வந்தபின் அவன் முகத்தைப் பார்த்ததுமே அவள் கோபமெல்லாம் சிட்டாய்ப் பறந்து விட்டது. அதற்காகவே அவள் தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு பார்த்தாள். அப்படியும் பயன் உண்டாகவில்லை. வர வர அவன் பக்கம் கவர்ந்து இழுக்கப்படுவதை அவள் உணர்ந்தாள். அதை முன்னிட்டும் அவளுக்குக் கோபம் உண்டாயிற்று. ஆனால் இப்போது கோபம் யார்மீது என்று தான் அவளுக்கு விளங்கவில்லை. அவன் மீதா, தன் மீதா ?

''ஸ்டேஷனுக்குப் போன் பண்ணினேன். பதில் கிடைக்க இத்தனை நாழியாயிட்டுது. எக்ஸ்பிரஸ் வண்டி எத்தனை மணிக்குப் புறப்படறதுன்னு தெரிஞ்சுக்கலாம்னு பார்த்தால், முதல்லே லயனே கிடைக்கல்லே. கிடைச்சப்புறம் சரியான பதிலே கிடைக்கல்லே. போன் பண்ணினது என் தப்பே தவிர, சர்க்கார் நிர்வாகத்தைக் குறை சொல்லலாமா? நமக்கெல்லாம் பதில் சொல்லவா அவர்கள் அங்கே இருக்கிறார்கள்? 'ஏழு பத்துக்கு வண்டி. இருங்க, எதுக்கும் கேட்டுச் சொல்றேன்'னு போனை வச்சிட்டுப் போயிட்டான். இனிமேத்தான் வரப் போறான். மெதுவா வரட்டும்னு நான் வந்துட்டேன்'' என்று நேரமாகி விட்டதற்குச் சாக்குச் சொன்னான் பாஸ்கரன்.

யாமினிக்கு அவன் போனதும் பிடிக்கவில்லை; சொன்னதும் ரசிக்கவில்லை. 'இது எதுக்கு இந்தச் சமாதானம்? இதையெல்லாம் நான் கேட்டேனா? எதுக்காகத் தப்புச் செய்துட்டாப்பலே இவ்வளவும் சொல்ல வரணும்?' என்ற வார்த்தைகள் உதட்டளவில் தேங்கி நின்று துடித்தன. என்ன காரணத்தாலோ நெஞ்சு தழுதழுத்தது. கண்ணீர் அரும்பி விடுமோ என்று கண்கள் பளபளத்தன.

''இப்ப என்ன செய்யலாம்? இந்த ஊரிலே மிருகக் காட்சிசாலை, ரவிவர்மா ஆர்ட் காலரி யெல்லாம் பார்க்க வேண்டிய இடங்களாம். விசாரிச்சேன்'' என்று சொன்னான் பாஸ்கரன்.

''ஊம்...எனக்கு என்ன தெரியும்?'' என்று கையை விரித்து, முகத்தை வேறு புறமாகத் திருப்பிக்கொண்டாள்.

ஒரு நிமிஷம் முழுதும் பொறுத்திருந்து பார்த்து விட்டு, ''நான் என்னமோ ஒரு வேகத்தில் அப்படிச் சொல்லிட்டேன். யோசிச்சுப் பார்த்தப்புறம் தான் என் அசட்டுத்தனம் எனக்குத் தெரிஞ்சுது. என்னமோ ஞாபகத்திலே, சோபனா ஜோஷிகிட்டே சொல்றப்பலே சொல்லிட்டேன்!'' என்றான் அவன்.

இந்தப் பெயரை மறுபடியும் கேட்டதும் யாமினிக்கு 'ஸ்பார்க்'கைத் தீண்டியது போலிருந்தது. திரும்பி அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

'' உன்னோட பேசறப்போவெல்லாம் என்னையறியாமலே அவள் ஞாபகம் தான் அடிக்கடி வந்துடறது. அதான் சொன்னேனே, உங்களுக்குள்ளே அப்படி ஏதோ பொதுவா ஒரு ஒற்றுமை இருக்குன்னு....!''

''சரி; மிருகக் காட்சிசாலைக்கோ, ஆர்ட் காலரிக்கோ, எங்கேயாவது போகலாம். யாரையோ எண்ணிண்டு என் கிட்டே பேச வரது அழகாத்தான் இருக்கு. நான் எந்தச் சோபனாவைக் கண்டேன், ஜோஷியைக் கண்டேன்!''

''அவள் வந்து......''

''அவளை எனக்கு ஒண்ணும் தெரிய வேண்டாம். என்ன, உங்களுக்குத் தெரிஞ்சிருக்கிறதோட வச்சுக்கலாம்.''

''நீ என்னமோ தப்பா நினைக்கிறே போலிருக்கு!''

''அதெல்லாம் இல்லே. ரொம்பச் சரியாத்தான் நினைக்கிறேன். எங்கிட்டே உள்ள ஒற்றுமையினாலே நான் இருக்கிறது ரொம்பச் சௌகரியமாப் போச்சு உங்களுக்கு — அடிக்கடி அவளை நினைச்சுக்க! அவ்வளவுதானே ?''

பாஸ்கரன் போயிருந்த கடையிலிருந்து ஒரு பையன் வந்து நின்றான்.

''நமக்கு வழி காட்டறதுக்காக வரச் சொன்னேன், இந்தப் பையனை. வேண்டியதுதானே ? வேண்டாம்னு போகச் சொல்லிடலாம். இவனுக்குத் தமிழ் வராது. மலையாளம்தான் தெரியும். அதனாலே இடைஞ்சல் இருக்காது.''

''என்ன இடைஞ்சல்?''

''ஊகும். நாம என்ன பேசினாலும் புரியாதுங்கிறதுக்குச் சொல்றேன்.''

''பேசப் புரியாமெ வழி காட்ட வந்திருக்கானா இவன் ?''

''இவன் என்ன புரிஞ்சுக்கணும் ? பேசாமெ கையைக் காட்டி வழி சொல்லப் போறான். நான் ஓட்டப் போறேன். தெரியாத வழியிலே போய்த் திண்டாடிண்டிருப்பானேன் !''

''சரி; வழியைத் தெரிஞ்சுண்டே திண்டாடுவோம். முதல்லே போஸ்டாபீஸுக்குப் போயிட்டுப் போகலாம். மத்ததை அப்புறம் பார்த்துக்குவோம்.''

பின்னல் ஏறிக்கொண்டான் பையன். அவன் வழிகாட்ட வண்டி போஸ்டாபீஸை நோக்கிச் சென்றது.

''கூசிலாவுக்கா, ஊருக்கா ?''

''இரண்டு இடங்களுக்கும்தான்.''

''சுசீலாவுக்குத் தபால் போறதுக்குள்ளே நீயே போய்ச் சேர்ந்துடுவே!''

'' தபால் என்னிக்குப் போகும், அங்கே ?''

''நாளைக்குப் போகும். பத்து மணிக்குக் கிடைக்கும். எக்ஸ்பிரஸ்ஸோ, டாலைஞ்சரோ காலையிலே அஞ்சு மணிக்கெல்லாம் போயிடுமே!''

''எக்ஸ்பிரஸ் போயிடும்; சரி. தினமும்தான் போயிண்டிருக்கு. ஆனல் நான் போகணுமே !''

பாஸ்கரன் வியப்பு மேலிட்டால் அவன் பக்கம் திரும்பினன்.

''சரியாய்ப் போச்சு. வழியை விட்டு இப்படித் திரும்பினல்?''

நல்ல வேளை; துளி தவறியிருந்தால் வண்டி, பாதையை விட்டு விலகியிருக்கும். பாஸ்கரன் அநாயாசமாகச் சமாளித்து விட்டான். அந்த லாகவத்தைக் கண்டு யாமினி பிரமித்தாள்.

''அப்ப நீ இன்னிக்குப் போகப் போறதில்லையா? நான் சொன்னப்படலே கடிதாக எழுதிப் போட்டுடறியா ?''

''அப்படிச் செய்தால் ரொம்பச் சந்தோஷம்தான் போலிருக்கு!''

'' அதிலே சந்தேகம் வேறயா ? கரும்பு தின்னக் கூலியா?''

''போறேம் போகல்லே எதுக்கும் கவலைப்பட இடமில்லாமெ எழுதிப் போட்டுடறது நல்லதில்லையா?''

பாஸ்கரன் முகம் இதைக் கேட்டதும் சிறிது வாடிற்று.

''நீதான் கணத்திலே 'முடிவு' எடுத்துக்கிறவளாச்சே !''

'' அதனலேதான் கடிதாக போட்டுடலாம்னு நினேச்சேன்.''

'' நான் இந்த 'முடிவை'ச் சொல்லலே.''

''ஆன நான் வேறே எந்த 'முடிவு'க்கும் இன்னும் வரல்லே.''

போஸ்டாபீஸ் வந்ததும் இருவரும் இறங்கிச் சென்றர்கள். பாஸ்கரன் இரண்டு உள்நாட்டுத் தபால் கடிதங்களை வாங்கிக் கொண்டு வந்தான். பையிலிருந்த பேனவையும் எடுத்துக் கொடுத்தான். எத்தனை உபசாரம் !

''ஓகோ, இது 'அந்த' ஷீஃபர்ஸ் பேனவா?'' என்று கேட்டாள் யாமினி.



ம. பொ. சி. பிறந்த தின விழாவில் ராஜாஜி வேடிக்கையாகச் சொன்னர்: ''ம. பொ. சி. தமிழுக்குச் செய்து வரும் தொண்டு பாராட்டத் தக்கது. தொண்டையும் கூட!''



ராஜாஜி பிறந்த தின விழாவில் பேசிய சிலம்புச் செல்வர் ம. பொ. சி. வேடிக்கையாகக் கூறினர்: ''ராஜாஜியை வாழ்த்த நான் யார்? ஆண்டவனும் இல்லே......ஆண்டவனும் இல்லே.''

-பார்த்திபன்

சட்டென்று காமேகவரன் எழுதியிருந்தது அவன் நினைவுக்கு வந்தது. திருவனந்தபுரம் தபாலாபீஸில் அவனுக்காக ஓர் இன்ஷியூர் கவர் அதன்படி காத்திருக்க வேண்டுமே! இதை எப்படி அவன் மறந்து போனன்? காலையில் இஷ்டப்படி பணத்தைச் செலவழித்த போதுகூட இந்தத் தபாலாபீஸ் நினைவு வரவில்லையே, எப்படி ?

''நல்ல வேளை; உன்னலேதான் இப்பவாவது நினைவு வந்தது. இல்லாட்டா இது திரும்பிப் போயிருக்கும்'' என்று போஸ்ட் மாஸ்டரைச் சந்தித்து, லைசென்ஸ் சர்ட்டிபிகேட்டையும் அடையாளச் சீட்டையும் காட்டி அந்த உறையை வாங்கிக் கொண்டு வந்தான்.

உள்ளே, வழிச் செலவுக்காக ஆயிரம் ரூபாய் அனுப்பி யிருந்தான் காமேகவரன். கையில் போதிய பணம் இருந்தது. இதுவும் இருந்தால் நல்லதுதானே?

''கடிதம் எழுதியாச்சா ?''

''எழுதியாச்சு.''

''என்னன்னு சொல்லலாமோ?''

''சொல்லாமல் ? ஊருக்கு எப்பத் திரும்பி வர்றேன்னு அடுத்த கடிதத்திலே தெரிவிக்கிறதா எழுதியிருக்கேன். திருப்திதானே ?''

''அதாவது சுசீலாவுக்கு. அவள் அதைப் பார்த்ததுமே புரிஞ்சுப்பாள், இல்லையா? வீண் கவலையெல்லாம் பட்டு வதந்திக்கெல்லாம் இடம் கொடுக்க மாட்டாள், இல்லையா ?''

யாமினி சிரித்துக் கொண்டே தலையை ஆட்டி வைத்தாள். **(தொடரும்)**

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'

வலியால் அவதிப்படும்போது விரைவில் நிவாரணம் பெற 'ஆஸ்ப்ரோ'லை நம்புங்கள். 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோ–ஃபைன் செய்யப்படுகிறது. அதாவது, அது அதிவேகமாகக் கரைந்து அதிவேகமாகக் கிரகிக்கப்பட்டு, வலியை அதிவேகமாக வெளியேற்றிவிடுகிறது. சாதாரண வலிநிவாரணிகளைவிட இருமடங்கிற்கும் அதிகமான வேகத்துடன் 'ஆஸ்ப்ரோ' வேலை செய்கிறது என்பதை விஞ்ஞானரீதியான பரிசோதனைகள் நிரூபித்துள்ளன!

எனவே, வலியால் அவதிப் படும்போது, நீங்கள் நம்பக்கூடிய நண்பனை நாடுங்கள்—மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிட்டு உடனடி நிவாரணம் பெறுங்கள்.

கீழ்க் கண்டவைகளுக்கு மைக்ரோ:ஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளூ • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப்பட்டால் மீண்டும் சாப்பிடவும்.

குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி.






**தாமத நிவாரணம்**

பெரிய அணுக்கூறுகள் மெதுவாகக் கிரகிக்கப்படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அடைய அதிக நேரமாகிறது. நீங்கள் அனாவசியமாக வலியால் அவதிப்படுகிறீர்கள்.




**துரித நிவாரணம்**

நுண்ணிய அணுக்கூறுகள் விரைவில் கிரகிக்கப்படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. வலியை அதிவேகமாகப்போக்கி விடுகின்றன.

## 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோ:ஃபைன் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் தயாரிப்பு

A.G.43 TM

## 19. பாசத் தவிப்பு

மிகச் சுருக்கமாக எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் அதை மடித்தபடியே பேராசிரியர் கமலசாமியை நெருங்கினான் முரளி. பக்கத்தில் கிடந்த மற்றொரு சோபாவில் அமர்ந்தான்.

பேராசிரியரைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. அவருடைய கவலையையும், பரபரப்பையும் அவனால் உணர முடிந்தது. ஆனால் அந்த அளவுக்கு முரளி பரபரப்படையவில்லை.

''ஓரளவு நான் இது எதிர்பார்த்தது தான்'' என்றான் முரளி.

''இப்படி நடக்கும் என்று தெரியுமா? தெரிந்துமா என்னிடம் நீ சொல்லாமல் இருந்து விட்டாய்...?'' என்று மிகுந்த வேதனையுடனும், ஏமாற்றத்துடனும் கேட்டார் பேராசிரியர்.

''கம்யூனிஸ்ட் கட்சியில் அவள் சேரப் போகிறாள் என்பது மட்டும்தான் தெரியும்.... ஆனால் இப்படி உங்களை விட்டு விட்டுப் போய் விடுவாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை'' என்று கூறி நீண்ட பெருமூச்சு விட்டான். பிறகு எழுந்து நின்றான். ''தேடிப் பார்த்து விட்டு வருகிறேன்'' என்றான்.

'' இந்த நேரத்தில் எங்கே போய்த் தேட முடியும்? போகும் இடத்தைக் கூடக் கடிதத்தில் எழுதவில்லையே?''

# போராட்டங்கள்

ர. சு. நல்லபெருமாள்



''அரை மணி நேரத்துக்குள் வந்து விடுகிறேன்'' என்று சொல்லி விட்டுக் காரை நோக்கி விரைந்தான் முரளி.

• • •

சில நிமிஷங்களுக்குள் சிவராமனுடைய வீட்டை அடைந்தான். அப்போது மணி பத்து இருக்கும். வீட்டுக்குள் சிவராமன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய தாயார் பரிமாறிக் கொண்டிருந்தாள். வேகமாக வீட்டுக்குள் நுழைந்து சிவராமனுக்கு எதிரே நின்ற முரளி, ''சாரதா எங்கே?'' என்று கேட்டான்.

முரளியின் குரலில் தொனித்த பரபரப்பையும், கோபத்தையும் சிவராமன் நன்றாகப் புரிந்து கொண்டு இலேசாகச் சிரித்தான்.

''நிற்கிறாயே, உட்கார்.... அம்மா, இலையைப் போடேன், இவனுக்கும்'' என்றான் சிவராமன் சாவதானமாக.

முரளிக்கு எரிச்சலாயிருந்தது.

''விருந்தெல்லாம் அப்புறம் சாப்பிடுகிறேன்.... முதலில் சாரதா எங்கே இருக்கிறாள் என்று தெரிய வேண்டும்'' என்று எரிந்து விழுந்தான் முரளி.

''அவள் என்ன குழந்தையா, தொலைந்து விடுவதற்கு? இப்படிப் பதறுவானேன்?'' என்றான் சிவராமன்.

''கமலசாமி பதறிப் போயிருக்கிறார். கட்சியில் சேர்ந்து எங்கோ போவதாகவும், தேட வேண்டாம் என்றும் எழுதி வைத்து விட்டுச் சாயங்காலம்தான் போயிருக்கிறாள். பாவம், பேராசிரியர் தவியாகத் தவிக்கிறார்.''

''என்னிடம் வந்து கேட்டால் என்ன தெரியும்...?'' என்றான் சிவராமன், அலட்சியமாக.



"அந்தப் பெண்ணுக்கு என்ன? எட்டு மணிக்கெல்லாம் அவளும், காந்தாமணியும் இங்கே இருந்துதானே போனார்கள்....?" என்று குறுக்கிட்டுப் பேசினாள், சிவராமனுடைய தாயார், பட்டம்மாள்.

"உனக்கு அவன் இருக்கும் இடம் தெரியும்" என்றான் முரளி, அழுத்தமாக. சிவராமன் சிரித்தான்.

"தெரிந்து என்ன செய்ய...? கட்சி நடவடிக்கைகளை வெளியிடக் கூடாது. அதுவும் நீ ஒரு பத்திரிகை வேறு நடத்துகிறாய்....."

"எனக்காக நான் உன்னிடம் வர வில்லை. பேராசிரியருக்காகத்தான் இவ்வளவு தூரம் வந்தேன்" என்றான் முரளி.

"உயிருக்கு ஆபத்து ஒன்றும் இல்லை என்று அவரிடம் போய்ச் சொல்லு" என்றான் சிவராமன், சிரித்துக்கொண்டு.

"ஒரு தந்தையுடைய பாசத் தவிப்பை நீ உணரவில்லையே...! ஹூம், உன்னுடைய சித்தாந்தப்படி குடும்பம், பாசம் எல்லாமே பூர்ஷ்வாக்களின் கற்பனைதானே...? உன் அம்மாவிடம்கூட நீ இப்படித்தான் நடந்து கொள்வாய் போலிருக்கிறது" என்று கூறிவிட்டு வெறுப்புடன் முகத்தைச் சுளித்தான் முரளி. பிறகு சொன்னான்:

"உனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த குரு என்பதற்காகவாவது நீ கமலசாமியின் மனத்தை வருத்தாதே. அவன் எந்தக் கட்சியில் வேணும் மாறனும் சேர்ந்து கொள்ளட்டும். ஆனால் குடும்பத்தைக் குலைத்து விடாதே."

"என்னிடம் சொல்லி என்ன பிரயோஜனம்? சாரதாவிடம் போய்ச் சொல்" என்றான் சிவராமன்.

"அவன் இருக்குமிடத்தை நீ சொல்லித் தொலைத்தால்தானே....?"

"அவன் எங்கே இருக்கிறான், எங்கே போவான் என்பதெல்லாம் கட்சி விஷயம்" என்றான் சிவராமன்.

"அவனைத் திரும்ப அழைத்துப் போக நான் வரவில்லை. கமலசாமியின் நிலைமையை அவனிடம் சொல்லி விட்டுப் போய் விடுகிறேன். அவன் எங்கே இருக்கிறான் என்பதை மட்டும் சொல்" என்று கெஞ்சினான் முரளி.

"நீ எவ்வளவு முயன்றாலும் நான் சொல்வதற்கில்லை. முரளி. மன்னித்துக் கொள். கமலசாமியைத் தைரியமாக இருக்கச் சொல். இன்னும் ஒன்றிரண்டு மாதங்களில் மீண்டும் வருவான். பயப்பட வேண்டாம்."

"நீ இப்போது அவன் இருப்பிடத்தைச் சொல்லவில்லை என்றால் நான் போலீஸின் உதவியை நாட வேண்டியிருக்கும்" என்றான் முரளி, கோபத்துடன்.

"ஓ.... ஹோ... ஹோ... ஹோ." பெருங் குரலில் சிரித்தான் சிவராமன். "போலீஸா, போலீஸ்.... ஹோ... ஹோ..... !"

சிவராமனின் அலட்சியச் சிரிப்பு முரளிக்கு எரிச்சலைக் கொடுத்தது. பட்டம்மாள் ஓர் இலையைக் கொண்டு வந்து முரளிக்கு முன்னால் போட்டாள்.

"உட்காரப்பா. சாப்பிட்டுக் கொண்டே இருவரும் பேசுங்கள்" என்றாள் சிவராமனின் அன்னை. முரளி பதில் ஒன்றும் பேசாமல் நின்றவாறே சிவராமனை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"கடைசியில் உன்னுடைய முடிவு தான் என்ன ?" என்று வெறுப்புடன் கேட்டான் முரளி.

"அதுதான் அப்போதே சொல்லி விட்டேனே. அவன் இருக்குமிடத்தை நான் சொல்வதற்கில்லை. இது கட்சி விஷயம்" என்றான் சிவராமன் அழுத்தமாக.

"நீயும் உன் கட்சியும், சித்தாந்தமும்...." என்று கோபத்தில் உறுமிக் கொண்டே அந்த வீட்டை விட்டு வேகமாக வெளியேறினான் முரளி.

**கா**ரை மிக வேகமாகச் செலுத்தினான். கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்துக்குப் பக்கத்தில் வந்ததும் முரளிக்குச் சந்தேகம் தோன்றவே, காரைக் காரியாலயக் கட்டடத்தின் முன் நிறுத்தி விட்டு வாசலில் இருந்த 'காலிங் பெல்'லை அழுத்தினான். சிறிது நேரத்தில் கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தான் நல்லதம்பி.

இருட்டாக இருந்ததால் ஒருவரை யொருவர் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

"என்ன வேண்டும்?" என்று கேட்டான், நல்லதம்பி.

"காந்தாமணி இருக்கிறார்களா?" — முரளி கேட்டான்.

"நீங்கள் யார் ?"

"என் பெயர் முரளி...."

"ஓ....! 'பாரத மணி' ஆசிரியரா? காந்தாமணியை நீங்கள் எதற்காகப் பார்க்க வேண்டும்?"

"நேரில் பேச வேண்டும்."

"இங்கு வரவில்லையே" என்றான் நல்லதம்பி.

"எங்கே பார்க்கலாம்?"

"இரவு பத்து மணிக்கு மேல் அப்படி என்ன அவசரம்?"

''அதுதான் சொல்லி விட்டேனே. நேரில் அவளிடம் பேச வேண்டும்'' என்றான் முரளி.

உடனே கதவைப் படீரென்று சாத்தினான் நல்லதம்பி.

முகத்தில் அறைந்த மாதிரி கதவு சாத்தப்பட்டதும் முரளி திகைத்துப் போய் நின்றான். கோபம் கொந்தளித்தது. ஆனால் யாரிடம் காட்ட முடியும்? ஏமாற்றத்தையும், கோபத்தையும் காரின் மீது காட்டினான். கார் உறுமிக் கொண்டு பாய்ந்தது.

முரளி திரும்பி வந்தபோது பேராசிரியர் வராந்தா சோபாவிலேயே தான் சாய்ந்து கிடந்தார். காரை விட்டு முரளி இறங்குவதற்குள் பேராசிரியர் படபடப்புடன் எழுந்து காரை நோக்கி விரைந்தார்.

''என்ன....? சாரதா எங்கே இருக்கிறாள் ?'' என்று கேட்டு விட்டுப் பயத்தோடு முரளியை வெறிக்கப் பார்த்தார் கமலசாமி.

''சிவராமனைப் பார்த்து விட்டு வருகிறேன். அவன் இருக்குமிடத்தைச் சொல்ல மறுத்து விட்டான்'' என்று கூறிக் கொண்டே வராந்தாப் படிகளில் ஏறினான் முரளி.

''அவ்வளவு இரகசியத்துக்கு இப்போது என்ன வந்தது? அவள் எந்தக் கட்சியில் வேண்டுமானாலும் சேர்ந்து கொள்ளட்டும். நான் தடுக்கப் போவதில்லை'' என்றார் பேராசிரியர்.

''சிவராமனும் இப்படித்தானே படித்துக் கொண்டிருக்கும் போது திடீரென்று காணாமல் போய் விட்டான்? கட்சியில் சேர்ந்த பிறகு கட்சி சம்பந்தமான விஷயங்களில் பயிற்சிபெற அங்கத்தினர்கள் எங்கோ அனுப்பி வைக்கப்படுகிறார்கள். சாரதாவும் அங்கேதான் போயிருப்பாள். நாளைக் காலையில் நீங்களும் வாருங்கள். சிவராமனைப் பார்க்கலாம். உங்களை நேரில் கண்டால் ஒருவேளை அவன் மனம் இளகலாம்'' என்றான் முரளி, சிறிது நம்பிக்கையுடன்.

மறு நாள் காலையில் முரளியும், கமலசாமியும் சிவராமனைக் காண கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்துக்குச் சென்றார்கள்.

காரியாலயத்தில் சிவராமனும், நல்லதம்பியும் இருந்தார்கள்.

''மன்னித்துக் கொள்ளுங்கள் சார்! சாரதா இந்த ஊரில் இல்லை. இன்று காலை ஐந்து மணிக்கு வேறு ஊருக்குப் போயிருக்கிறாள்'' என்றான் சிவராமன்.

''இன்றைக்குக் காலையிலா? நேற்று இரவு இங்கேயேவா இருந்தாள்?'' என்று பரபரப்புடன் கேட்டான் முரளி.

''நேற்று இந்தக் காரியாலயத்தில் தான் இருந்தாள்'' என்று கூறிவிட்டுச் சிரித்தான், சிவராமன்.

''அப்படியா...? நேற்று இங்கும் வந்து விசாரித்தேனே?'' என்றான், முரளி, ஏமாற்றத்துடன். சிவராமன் வியப்புடன் நல்லதம்பியைத் திரும்பிப் பார்த்தான். நல்லதம்பி விஷமச் சிரிப்போடு தலையை ஆட்டினான்.

''அவர் காந்தாமணியைப் பற்றித் தான் விசாரித்தார்.....'' என்றான்.

''இருவரும் இங்கேதான் தங்கியிருந்தார்கள். இன்று காலையில்தான் அவர்கள் புறப்பட்டுப் போனார்கள்'' என்றான் சிவராமன்.

முரளி கோபத்துடன் நல்லதம்பியை உற்றுப் பார்த்தான். நல்லதம்பி அலட்சியமாகச் சிரிப்பை உதிர்த்தான்.

''சாரதாவைப் பற்றிக் கேட்டிருந்தாலும் அதே பதிலைத்தான் சொல்லியிருப்பேன்'' என்றான். முரளி வெறுப்புடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

'' இப்போது எந்த ஊருக்குப் போயிருக்கிறாள் ?'' — மிகுந்த ஆவலோடும், பரபரப்புடனும் கேட்டார், பேராசிரியர். அவருடைய கண்கள் சிவராமனைப் பார்த்துக் கெஞ்சின.

''மன்னித்துக் கொள்ளுங்கள். சார்! அதைப் பற்றிச் சொல்ல எனக்கு அதி

## வழிகாட்டி !

ஏதாவது விபத்தையோ, குற்றம் நிகழ்ந்ததையோ கண்டால், நம் நாட்டு மக்கள் சாட்சி சொல்லப் பயந்து கம்பி நீட்டி விடுகிறார்கள். எனவே, நியாயம் வழங்க இயலாமல் போய்விடுகிறது.

1938ல் சென்னை முதல் மந்திரியாக இருந்த ராஜாஜி, தம்மிடமே மோசடி செய்ய வந்த ஒருவர் விஷயத்தில் சாட்சி சொல்ல வந்தார். 'நாங்கள் வரத் தேவையில்லை. நாங்களே பார்த்துக் கொள்ளுகிறோம்' என்றார்கள் அதிகாரிகள்.

''கூடாது. ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் என்னைப் போன்றவர்களே தட்டிக் கழித்தால், சாதாரண மக்களுக்குத் துணிவு எப்படி வரும்? அவர்களுக்கு வழிகாட்டியாக அமைய நான் வரத்தான் வருவேன்!'' என்றார் ராஜாஜி.

- மு. வி.

# சுத்தமான தேன்!

நூற்றுக்கு நூறு சுத்தமானது. கேரளம் குடகு, கன்னியாகுமரி இவ்விடங்களிலிருந்து அந்தந்த பிராந்திய விசேஷ சுவையும் மணமும் பிரதிபலிக்கும் மூன்று வகை தேன் — 450, 225 கிராம் புட்டிகளில் கிடைக்கும்.

அரசு அங்கீகாரம் பெற்ற
அக்மார்க் முத்திரையுடன்
பாக் செய்யப்படுகிறது

**ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்.**

153, மவுண்டு ரோடு சென்னை-2.




சென்னை, மவுண்ட்ரோடிலுள்ள எமது ஷோரூமில் எல்லா சில்லரை விற்பனை இலாக்காக்களும், (வீட்டு அலங்கார பொருள்கள் விற்கும் பிரிவு தவிர) காலை 8-30 முதல் இரவு 7 மணி வரை தொடர்ந்தாற்போல் திறந்திருக்கும்

# அல்போ-ஸாங்

எல்லா வயதினருக்கும் ஏற்ற இலட்சிய டானிக்.




இளைஞர், முதியோர் யாவருக்கும், எல்லாக் காலத்திலும் ஏற்ற டானிக்காகிய அல்போஸாங்கை அருந்தி, உங்கள் உடல்வலத்தை உருவாக்கிக் கொள்ளுங்கள்.

**ஜே.& ஜே.டிஷேன்**

ஹைதராபாத், இந்தியா

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணா விஹார்" — 17-A, பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

**டிசம்பர் 1970-க்குரிய கீழ்க்கண்ட புதிய குரூப்புகள் ஆரம்பிக்கப்படுகின்றன**

*ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வாய்ப்புள்ள மேற்கண்ட குரூப்புகள்*

| குறுகிய காலம் : 25 மாதங்கள் | | | நீண்ட காலம் : 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி : 12-12-70 | | | சேருவதற்கு கடைசி தேதி : 26-12-70 | | |
| முதல் ஏலத் தேதி : 13-12-70 | | | முதல் ஏலத் தேதி : 27-12-70 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

*நீண்ட காலம் : 50 மாதங்கள் — ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு*

சேருவதற்கு கடைசி தேதி : 19-12-70 :: முதல் ஏலத் தேதி : 20-12-70

| வகுப்பு | தவணை ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,500/- |

*வேலை நேரம் :* { *காலை 8 மணி முதல் 10-30 வரை*
*மாலை 4 மணி முதல் 7-30 வரை* }

**வார விடுமுறை திங்கட்கிழமை**

*தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :*

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி : 414, சென்னை

*கிளைகள் :* பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி

*இலவச பிரகடனத்திற்கு எழுதுங்கள்*

*சீட்டுகள் ஒழுங்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது*

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

VIK - BBC - KALKI 1012-'70

தாயை இழந்துவிட்ட துரதிர்ஷ்டத்தை நினைத்துத் தன்மீதே கோபம் கொண்டான்.

**"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே!"**

'பாரதமணி'யின் முன்பக்கத்தில் ஒவ்வொரு நாளும் அச்சாகும் இந்தப் பொன்மொழி அவன் நினைவுக்கு வந்தது. அன்றிரவு அவன் கமலசாமியுடனேயே இருந்தான்.

படுக்கையிலிருந்து திடீரென்று எழுந்து உட்கார்ந்தார், கமலசாமி.

"என் மீது அவளுக்கு என்ன கோபம்...? உன்னிடம் அவள் ஏதாவது சொன்னாளா?" என்று கேட்டார்.

முரளியும் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

"இல்லையே!" என்றான்.

"என் மீது அவளுக்கு வெறுப்பு இல்லையென்றால் இப்படி ஓடுவாளா? சிறையிலிருந்து தப்பி ஓடுவது மாதிரி அல்லவா போயிருக்கிறாள்! இப்படி ஒரு 'கேரக்டர்' இல்லாத அப்பனிடம் இருந்து வாழ்வது அவளுக்குக் கேவலமாக இருந்திருக்கலாம்" என்று சொல்லி விட்டுக் கமலசாமி பெருமூச்சு விட்டார். பிறகு சொன்னார்:

"அவளுக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. அவளுடைய படிப்பிலும்,—அறிவுக் கூர்மையிலும் நான் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தேன்! என்னை அவள் மன்னித்திருக்கலாம்... நோ... அவள் இப்படி என்னை விட்டு ஓடியிருக்கக் கூடாது....." பேராசிரியரின் குரல் தழுதழுத்தது.

"உங்கள்மீது வெறுப்பு இருப்பதாக அவள் கடிதத்திலிருந்து தெரியவில்லையே? கட்சியில் பணி புரிவதற்காக வெளியேறுவதை நீங்கள் அனுமதிக்கமாட்டீர்கள் என்பதால்தான், அவள் சொல்லிக் கொள்ளாமல் போவதாக எழுதியிருக்கிறாள். கட்சி சித்தாந்தங்கள் போதையை ஏற்றி விட்டன; அவ்வளவுதான்" என்றான் முரளி.

"எல்லாம் சிவராமனின் தூண்டுதல் தான்" என்று கூறிவிட்டு, துக்கத்தினால் மேலும் பேச முடியாமல் திணறினார் கமலசாமி. திடீரென்று கட்டு மீறிக் கொண்டு அழுகை வரவே தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டார். அவருடைய வேதனையைக் காண முரளிக்கு நெஞ்சு வலித்தது.

**ம**று நாள் காலை 'பாரத மணி' காரியாலயத்திலிருந்து கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்துக்குப் போன் செய்தான் முரளி. அன்று காலை, சிவராமன் விமானத்தில் ரஷ்யாவுக்குப் புறப்பட்டுப் போய் விட்டதாகத் தகவல் வந்தது. சில நாட்களுக்கு முன்பு, 'பாரதமணி'க்கு எதிராக ஆதிமூலத்தின் சதி பற்றிச் சிவராமன் கூறியது முரளியின் நினைவிலிருந்து உறுத்திக் கொண்டிருந்தது. ஆதிமூலத்தை இந்த விஷயத்தில் தூண்டிக் கொண்டிருப்பவன் நல்லதம்பி என்ற உண்மையை முரளி அறியவில்லை. சிவராமனும் கூறவில்லை. 'பாரத மணி'க்கு இவ்வளவு எதிர்ப்பும் இடைஞ்சலும் ஏற்படுகிறதே என்று எண்ணி மனம் சலித்துக் கொண்டான்.

பக்கத்தில் நின்று கொண்டிருந்த சாமிநாதன், மாலையில் வந்த தபால்களைப் பிரித்து மேஜையின்மீது அடுக்கிக் கொண்டிருந்தான்.

"முக்கிய செய்தி ஏதாவது உண்டா?" என்று கேட்டான் முரளி.

"ரஷ்யாவில் நடக்கும் உலக கம்யூனிஸ்ட் மகாநாட்டுக்கு இந்தியாவிலிருந்து இன்று பலர் புறப்பட்டிருக்கிறார்கள். சிவராமனும் போயிருக்கிறார்."

"வேறு செய்தி....?"

"காளிநாதன் மில்லில் அடுத்த வாரம் வேலைநிறுத்தம் கண்டிப்பாக நடைபெறுமாம். மத்தியஸ்தர்களின் பேச்சு வார்த்தை வெற்றி பெறவில்லை. கம்யூனிஸ்ட் கட்சிதான் முன்னணியில் நின்று தூண்டி விடுகிறது. சிவராமன் ரஷ்யா போயிருப்பதால் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக் காரியதரிசிப் பதவியை நல்லதம்பியே ஏற்றிருக்கிறார்" என்றான் சுவாமிநாதன்.

* * *

**மு**ரளியின் உள்ளத்தைப் போலவே அவனுடைய காரும் சோர்வுடன் ஓடிக் கொண்டிருந்தது. ஒரு திருப்பத்தில் காரின் வேகம் மிகவும் குறைந்தது. அப்போது பிளாட்பாரத்தில் காளிநாதன் மில்லில் தொழிலாளியாக இருக்கும் வேலாயுதன் போய்க் கொண்டிருந்ததைக் கண்டதும் அவன் பக்கத்தில் காரை நிறுத்தினான். வேலாயுதன் மிகவும் மரியாதையுடன் காரின் பக்கத்தில் விரைந்து வந்தான்.

"என்னப்பா, மில்லில் அடுத்த வாரம் வேலைநிறுத்தமாமே?" என்று முரளி கேட்டான்.

"ஆமாம், தொழிற் சங்கத் தலைவர் பிடிவாதமா யிருக்கிறார்" என்றான் வேலாயுதன், வருத்தத்துடன்.

"மற்ற தொழிலாளர்கள் எப்படி?"

"யாருக்கும் இந்த வேலை நிறுத்தத்தில் விருப்பம் இல்லை. நல்லதம்பிதான்




## 'ஸான்ஃபரைஸ்ட்' முத்திரையின் பின்னே என்ன இருக்கிறது பார்த்தீர்களா ?

'ஸான்ஃபரைஸ்ட்' முத்திரையின் பின்னே பார்த்தீர்களானால் பலபேர், சோதனைகள் செய்வதையும், அளவுகள் எடுப்பதையும், அளவுகளை ஒப்பிடுவதையும், குறிப்புகள் எடுப்பதையும், அறிக்கைகள் தயாரிப்பதையும் காண்பீர்கள். இந்த ட்ரேட் மார்க்கின் சொந்தக்காரர்கள் விதித்துள்ள கடுமையான தரக் கட்டுப்பாடுகளுக்கு ஏற்ப துணிகளின் சுருங்காத்தன்மை அமைந்துள்ளதா என்பதை உறுதி செய்யும். 'ஸான்ஃபரைஸ்ட்' தொழில் நுட்பப் பிரதிநிதிகளே அவர்கள்.

இந்த முத்திரையை மீண்டும் ஒரு முறை பார்த்தீர்களானால் அதைத் தாங்கியிருக்கும் உடை எவ்வளவு முறை துவைத்தாலும், சுருங்கி அளவு மாறிப் போகாது என்று அது சொல்வதை உணர்வீர்கள்.

ஆம், 'ஸான்ஃபரைஸ்ட்' முத்திரையில் நீங்கள் பல விஷயங்களைக் காணலாம். அது உங்கள் பணத்திற்கு ஈடான மதிப்பை நீங்கள் வாங்கும் துணிகள் அமைப்பும் அளவும் மாறாமல் இருக்கும் என்பதற்கும் உறுதி அளிக்கிறது.

அடுத்த முறை, பருத்தி அல்லது பருத்தி கலந்த துணிகள் வாங்கும்போது, 'ஸான்ஃபரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்று பார்க்கத் தவறாதீர்கள். அது நீங்கள் நம்பக் கூடிய ஒரு டிரேட் மார்க்.

**·SANFORIZED·**

'ஸான்ஃபரைஸ்ட்' என்னும் டிரேட் மார்க்கின் [illegible]

MAA.SAN.9546 TAM.

# இருமலா?

# பெப்ஸ்

## இருமல் மற்றும் தொண்டைப் புண்களுக்கு எதிராக விந்தைச் செயல் புரிகிறது

லாஸஞ்ஜைப் போல வாயில் அடக்குங்கள் பெப்ஸ். பாதுகாப்புடன் இதமளிக்கும் மூலிகைச் சத்துக்கள் விரைவிலே வெளிப்படுகின்றன. இந்த அரிய சத்துக்கள் மூச்சுடன் கலந்து உங்கள் தொண்டையையும் சுவாச கோசத்தையும் நெகிழ்த்துகின்றன. இருமலோ, தொண்டைப் புண்ணோ அல்லது ஜலதோஷமோ உங்களைத் தொற்றும்போது பெப்ஸ் சக்தியுடன் இதமளிக்கிறது.




பெப்ஸ் 50 ஆண்டுகளுக்கும் மேலாக நம்பகமான இருமல் நிவாரணி!

பிடிவாதமாயிருக்கிறார். எத்தனை நாள் வேலை நிறுத்தம் நடக்குமோ தெரிய வில்லை. அதுவரை எங்கள் குடும்பத்தைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். ஏதோ உன்னுடைய உதவியால் இந்த வேலை கிடைத்தது. இதையும் இந்தக் கட்சிக்காரர்கள் கெடுத்து விடுவார்கள் போலிருக்கிறது'' என்று கூறியபோது, வேலாயுதனின் கண்கள் கலங்கின.

''எல்லாருமாகச் சேர்ந்து மறுக்க வேண்டியதுதானே ?'' என்று கேட் டான் முரளி.

''கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தொழிலாளர்கள், மறுப்பவர்களை அடித்து நொறுக்கி விடுவார்கள். எங் களை நிம்மதியாக இவர்கள் இருக்க விடுவதில்லை. நல்லதம்பி பொல்லாத வன்'' என்று கூறிப் பெருமூச்சுவிட் டான் வேலாயுதன்.

கார் நகர்ந்தது. அவனைப் பற்றிய பழைய நினைவுகள் எழுந்தன, முரளியின் மனத்தில்.

வேலாயுதனும், முரளியும் பள்ளித் தோழர்கள். அப்போது வேலாயுதனின் தந்தை, முரளியின் தந்தையிடம் கணக்கு வேலை பார்த்துக் கொண் டிருந்தார். ஆரம்பப் பள்ளியிலிருந்து உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடியும் வரையில் இருவரும் ஒன்றாகவே படித்து வந்தார்கள்.

பள்ளிப் படிப்புக்குப் பிறகு பல ஆண்டுகள் வேலாயுதனை முரளி சந் திக்கவேயில்லை. கல்லூரிப் படிப்புக்குப் பிறகு பத்திரிகை ஆரம்பிக்கப் பணம் புரட்டுவதற்காகச் சொந்த ஊருக்கு முரளி சென்ற போதுதான் வேலாயுத னைச் சந்தித்தான். வேலாயுதன், வறுமையோடு போராடிக் கொண் டிருந்தான். அவனுக்கு வாய்த்த மனைவி யின் ஊதாரித்தனமும் சேர்ந்துகொள் ளவே வேலாயுதன் தவித்தான். அந்தச் சமயத்தில்தான் காளிநாதன் மில்லில் அவனுக்கு வேலை வாங்கிக் கொடுத்தான் முரளி.

வேலாயுதனின் மனைவியின் பகட்டை யும், ஊதாரித்தனத்தையும் எண்ணி வேலாயுதன் மீது பச்சாத்தாபப்பட்ட வாறே காரைச் செலுத்தினான் முரளி.

**சா**மிநாதன் மில்லில் வேலைசேர்ந் தும் தொடங்கி ஒரு மாதம் ஆகியும் நிர் வாகிகளுக்கும், தொழிற் சங்கத் தலைவர் களுக்கும் சமரசம் ஏற்படவில்லை. எந்தச் சமயத்திலும் கலவரம் தோன்றலாம் என்னும் பதற்ற நிலை இருந்து கொண்டேயிருந்தது. பொதுக் கூட்டங் களில் நல்லதம்பியின் பேச்சும், பிரசார மும் தொழிலாளரிடையே வெறியை



நிருபர்: ''உங்கள் லட்சியம் என்ன?''

நடிகை: ''கறுப்புப் பண வேட்டை, என் வீட்டிலும் நடந்தது என்ற அளவுக்கு நான் பெரிய நடிகை ஆக வேண்டும் என்பது!''

ஊட்டிக் கொண்டிருந்தன. அரசாங்கம் மில் நிர்வாகிகளைப் பணிந்து போகும்படி வற்புறுத்தியதே தவிர, தொழிற் சங்கத் தின் நியாயமற்ற கோரிக்கையைப் பற்றி அக்கறை கொள்ளவில்லை.

ஒரு நாள், கடைசி முறையாகச் சந்தித்துப் பேசிச் சமரசம் காண, மில் நிர்வாகிகளும், தொழிற் சங்கத் தலை வர்களும், மில்லின் அலுவலகத்தில் கூடினார்கள். மில்லுக்கு வெளியே நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் கூடியிருந்தனர். போலீஸ் பந்தோபஸ்து எதுவுமோ இல்லை. அந்தச் சூழ்நிலையைப் பற்றி அறிந்து செய்தியை அனுப்பச் சாமிநாதனைக் காளிநாதன் மில்லுக்கு முரளி அனுப்பினான். சாமிநாதன், தன் னுடைய ஸ்கூட்டரை ஒரு வெற்றிலை பாக்குக் கடையில் நிறுத்திவிட்டுச் சூழ் நிலையை ஆராய்ந்தான். தொழிலா ளர்கள் பொறுமை இழந்து கூச்ச லிட்டுக் கொண்டிருந்தார்கள். மில் கட்டடத்துக்குள் நிர்வாகிகள் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந் தார்கள். கூட்டத்தையும், சுற்றுப் புறத்தையும் நன்கு தெரிந்து கொள்ள வெற்றிலைபாக்குக் கடைக்குப் பின்புறம் இருந்த அடர்த்தியான புளிய மரத் தின் மீது ஏறினான், சாமிநாதன். கிளை களுக்கு ஊடே நன்கு மறைந்து உட் கார்ந்து கொண்டான். தோளில் தொங்கிக் கொண்டிருந்த காமிராவை மரக்கிளை ஒன்றில் தொங்க விட்டுவிட்டுக் கூட்டத்தைக் கவனிக்கலானான். (தொடரும்)

## வேர்க்கடலை

**வேர்க்கடலை சாகுபடி செய்யும்**
**முற்போக்கு விவசாயிகள்**

# போராக்ஸ்

**உபயோகித்து**
**அதிக விளைச்சலும் உயர்ந்த**
**தரமும் பெறுகிறார்கள்**

தமிழ் நாட்டில், ஒரு ஹெக்டேர் நிலத்தில், விதைக்கும் சமயம் NPK உரங்களுடன் கூடவே 4 கிலோகிராம் போராக்ஸ் வருடத்தில் ஒரு தடவை மண்ணில் சேர்க்கும்படி சிபார்சு செய்யப்படுகிறது.

போராக்ஸ், எங்களுடைய கீழ்க்கண்ட விநியோகஸ்தர்களிடம் கிடைக்கும்:

மெஸ்ஸர்ஸ். ஜீவன்தாஸ் லால்ஜி அண்ட் ஸன்ஸ்,
212, கோவிந்தப்ப நாயக் தெரு, சென்னை-1

மற்றும்

மெஸ்ஸர்ஸ். இந்திரா கெமிக்கல் ஏஜென்ஸி பிரைவேட் லிமிடெட்,
208, கோவிந்தப்ப நாயக் தெரு, சென்னை-1

வேர்க்கடலை மற்றும் இதர பயிர்கள் விஷயமாக 'போரான் பற்றாக்குறையைப்' பற்றியும் அதை போக்கும் வழியைப் பற்றியும் அதிக விவரங்கள் பெற, இந்த விலாசத்துக்கு எழுதவும்:

போராக்ஸ் மொரார்ஜீ லிமிடெட்,
மகாத்மா காந்தி ரோட்,
அம்பர்நாத், தாணா ஜில்லா,
மஹாராஷ்டிர மாநிலம்



# குன்றிடைக் கோயில் குன்றாது பொலிக!

இறைவனின் உறைவிடங்களாக எழுப்பப் பெற்றுள்ள ஆலயங்கள் யாவுமே நம் போற்றுதலுக்கு உரியனவாம்; சந்தேகமில்லை. அவற்றிலும் புராதன காலத்தில் தெய்வ மூர்த்தங்களுடன் நேரடித் தொடர்பு கொண்ட மகா புருஷர்கள் நிறுவிய ஆலயங்கள் விசேஷமான போற்றுதலுக்கு உரியன. ஏனெனில் இவற்றில் தெய்வ சாந்நித்தியம் மிகுந்த சக்தியுடைய முறையில் மகான்களால் ஆகர்ஷிக்கப்பட்டுள்ளது. எனவே இவற்றிலிருந்து இறைவனின் அநுக்கிரகத்தை எளிதில் பெற முடியும்.

இப்படிப்பட்ட பெருமை கொண்ட ஒரு புராதன ஆலயம் சென்னை பல்லாவரத்துக்குச் சமீபத்தில் உள்ள திரிசூலத்தில் உள்ளது. இது சோழர் காலத் திருப்பணியாகும். இங்கு காருண்யமும் லாவண்யமும் ஒருருவான திரிபுரசுந்தரி தேவியுடன் பிரம்மபுரீசுவரர் கோயில் கொண்டுள்ளார்.

ஆலயம் அமைந்துள்ள அற்புதச் சூழலே நம் உள்ளத்தை உயர்நிலைக்கு இட்டுச் செல்வதாக அமைந்துள்ளது. நான்கு வேதங்களுக்கும் உட்பொருளாக விளங்கும் ஈசன் இங்கு நான்கு குன்றுகளின் மத்தியில், கம்பீரமும் புனிதமும் கொழிக்கும் ரமணீயமான சூழலில் வதிகிறார். ஒரு காலத்தில் 'சதுர்வேதி மங்கலம்' என்றே வழங்கியது இப்பதி. நான்கு வேதங்களும் பொலிய, அவற்றின் நாயகனும் இங்கு தர்பார் நடத்தியிருக்கிறான். ஆனால் பிற்பாடு ஏனோ அவன் ஏகாந்தத்துக்கு ஆளாகிவிட்டான்! திரிசூலம் தன் தொன்மைப் புகழை இழந்து நின்றது, பல்லாண்டுகளாக.

'கலி மலிந்து வரும் இன்று தன் ஏகாந்தம் உதவாது; எத்தனை எத்தனை ஆலயம் இருப்பினும் அத்தனை அத்தனையிலும் தான் மக்களைச் சார்ந்து அநுக்கிரகிக்க வேண்டும்' என்று இறைவன் சில ஆண்டுகட்கு முன்பு திருவுள்ளம் கொண்டிருக்க வேண்டும். (தம் பெயரை நிச்சயமாகப் பத்திரிகையில் வெளியிடக் கூடாது என்று வாக்குறுதி வாங்கிக் கொண்டிருக்கும்) ஒரு புனித ஜீவனைத் திரிசூலநாதன் தன்னிடம் ஈடுபடுத்திக் கொண்டான். அதிலிருந்து பிற ஜீவர்களும் திரிசூலநாதனையும், திரிபுரசுந்தரி தேவியையும் அறிந்து வழிபட்டு வருகிறார்கள். தற்போது அங்கு சிவராத்திரியும், நவராத்திரியும் மகோத்சவங்களாகவே நடக்கின்றன.

திரிசூலம் ஆலயத்தைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் நடத்த நன்முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. அண்மையில் பாலாலய பிரதிஷ்டை நடைபெற்றது. அன்றிலிருந்து தினமும் பரம பாவனமான ருத்ர திரிசதி அர்ச்சனை நடக்கிறது. இது சிவராத்திரியுடன் பூர்த்தியாகிறது. அப்போதே கும்பாபிஷேகமும் நடத்திவிட வேண்டும் என்பது திருப்பணிக் குழுவினரின் அவா. அதனைப் பூர்த்தி செய்ய வேண்டியது ஆஸ்திகர் பொறுப்பு. மிகச் செட்டும் கட்டுமாக அறுபது ஆயிரம் ரூபாய் செலவில் திருப்பணியை முடிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தத் தொகை விரைவில் திரளுவதற்கு உதவி புரியவேணும். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ டி. ஜே. மணி, (கூட்டுக் காரியதரிசி, திரிசூலநாதர் ஆலயத் திருப்பணிக் கமிட்டி), 13, சிவஞானம் சாலை, தி. நகர், சென்னை—17.



பாலாலயம் செய்யப்பட்ட திருமூர்த்தங்கள்



# ராமப்பன்





சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

குப்பண்ண கவுண்டன் இறந்தபோது அவனுடைய பெரிய மகன் கப்பண்ணை னுக்கு முப்பது வயது. கப்பண்ணன் தம்பிக்குப் பதினுறு வயது. சாதாரணக் குடியானக் குடும்பம். இரண்டு ஏகரா புஞ்செயை வைத்துக் கொண்டு சம்சாரம் நடத்தி வந்த குடும்பம்.

கப்பண்ணனும் ராமப்பனும் சக்கஎாத்தி மக்கள். முதல் மனைவி இறந்து நான்கு வருஷம் குப்பண்ணன் மறு விவாகத்தைப் பற்றி யோசிக்கவில்லை. பிறகு செய்து கொண்டான். இரண்டாம் தாரத்துக்குப் பிறந்த மகன் ராமப்பன். இவனைப் பள்ளிக்கூடத்தில் போட்டான். ''இந்தப் புஞ்செய்க் காட்டை வைத்துக் கொண்டு எத்தனை பேர் ஜீவனம் செய்ய முடியும்? இவன் ஏதாவது படிக்கட்டும். ஒரு உத்தியோகம் சம்பாதித்துக் கொண்டு வாழ்க்கை நடத்தட்டும்'' என்று மனைவி சொன்னதைக் கேட்டுப் பள்ளிக்கூடத்தில் போட்டான்.

பையன் புத்திசாலி. நன்றாய்ப் படித்துத் தேறிக்கொண்டு எட்டாவது வகுப்பில் முதல் இடம் பெற்றுன். வாத்தியார்களுக்கெல்லாம் ராமப்பனிடம் மிகப் பிரியம்.

குப்பண்ணன் இறந்த பிறகும் பையனுடைய படிப்பை நிறுத்தவில்லை. எப்படியோ கஷ்டப்பட்டுச் கப்பண்ணன் தன் தம்பியினுடைய படிப்புக்கு வேண்டிய செலவைச் சமாளித்து வந்தான்.

சுப்பண்ணன் இறந்த மறு வருஷத்தில் ராமப்பன் தாயாரும் வைசூரி கண்டு இறந்துவிட்டாள்.

குடும்பத்தில் வரவர ஒற்றுமை குலைந்தது. இதற்கு ஒரு மாமன் வந்து சேர்ந்தான். சுப்பண்ணனுடைய தாயுடன் பிறந்த மாமனும் அவன் மனைவியும் புளியம்பட்டிக்கு அடிக்கடி வந்து இரண்டு மூன்று நாட்கள் இருந்து போவார்கள். அவர்கள் கிராமம் பத்து மைல் தூரத்தில் காளியப்பன்புதூர் என்கிற ஊர்.

''இந்த மாதிரி தம்பியின் படிப்புச் செலவு நடந்து கொண்டே போனால் உங்கள் கதி என்ன? நாமெல்லாம் எந்தப் பள்ளிக்கூடத்தில் படித்தோம்?'' என்பான் மாமன் சாமியப்பன். சுப்பண்ணன் இந்தப் பேச்சை முதலில் பொருட்படுத்தவில்லை. ஆனால் ஓயாமல் அடித்தால் அம்மியும் நகரும் என்பதைப் போல் சில நாட்கள் கழித்து அதைப் பற்றி யோசிக்கலானான்.

மாமி பாவக்காளும் சுப்பண்ணன் மனைவியிடம் சொல்லுவாள்: ''இரண்டு ஏகரா புஞ்செய் வருமானம் இப்படிச் செலவாகிக் கொண்டு போனால் அந்தப் பையனுடைய படிப்பு முடிவதற்குள் இந்தக் குடும்பம் கெட்டுக் குட்டிச்சுவராகப் போகும். ராமப்பன் படித்துப் பாஸ் செய்து முன்னுக்கு வருவதை யார் கண்டார்கள்? அவனுக்கு உத்தியோகமானால் அவன் உங்களைக் காப்பாற்றப் போகிறானா, இல்லை; அதற்குள் நீங்கள் கூழுக்கு ஓடு எடுத்துக் கொண்டு பிச்சையெடுக்க வேண்டியதாகும்'' — அவள் இவ்வாறு மெதுவாக உபதேசம் நடத்துவாள். சுப்பண்ணன் மனைவி உண்மையில் பயந்து போனாள்.

''குடும்பம் சுத்தமாகக் கெட்டுப் போவதற்குள் பாகம் பண்ணிவிட்டுத் தம்பிக்கு உரிய பாகம் கொடுத்துப் போட்டு நீ சுகமாக உன் காரியத்தைப் பார்த்துக்கொண்டு போ'' என்று சாமியப்பன் சுப்பண்ணனுக்கு முடிவாக ஒருநாள் யோசனை சொன்னான். அவனும் அப்படியே செய்வதென்று தீர்மானித்தான்.

ராமப்பனுக்கு அப்போது பதினெட்டு வயது. பவானியில் பெரிய பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான்.

''அண்ணா! இப்படிச் செய்வதே முடிவானால் நான் சொல்வதைக் கேள். இந்தச் சிறு புஞ்செய்க் காட்டை இரண்டாகப் பிரித்தால் எப்படி உழுது வெள்ளாமை எடுக்க முடி



யும்? இரண்டு பாகமும் பயனில்லாமல் போகும். முழுக் காட்டையும் நீயே வைத்துக் கொள். எனக்கு ஒன்றும் வேண்டாம்'' என்றான் ராமப்பன்.

''தம்பி கோபித்துக் கொண்டு இப்படிச் சொல்கிறான்'' என்றான் மாமா.

''இல்லை மாமா! அப்படி ஒன்றுமில்லை. சந்தோஷமாகத்தான் சொல்லுகிறேன். அப்பா விட்டுப் போன நிலத்தைப் பிரித்துப் பாழாக்க வேண்டாம் என்று சொல்லுகிறேன். நான் ஏதாவது சிறு உத்தியோகம் சம்பாதிக்கப் பார்க்கிறேன். காடும் வீடும் அண்ணு வைத்துக்கொண்டு வாழட்டும்'' என்று ராமப்பன் சொல்லிவிட்டுப் பவானிக்குச் சென்று விட்டான்.

கப்பண்ணன் மனைவிக்கு இந்த நிகழ்ச்சிகள் திருப்தியே தந்தன. ஆனால் கப்பண்ணன் மனம் நிம்மதியில்லை. தான் ஏதோ பாவம் செய்ததாகவே மனத்தில் வருத்தப்பட்டான்.

''அவன் இப்படித் தியாகம் செய்யத் துணிந்தால் நாம் ஏன் தடுக்க வேண்டும்?'' என்றான் சாமியப்பன்.

* * *

**ப**வானியில் தாசில்தார் ஆபீஸில் ராமப்பன் ஒரு சேவக வேலை ஒப்புக்கொண்டான். படித்த பையன் ஆனபடியால் அந்த 'பியூன்' உத்தியோகம் சுலபமாகக் கேட்டவுடனேயே கிடைத்தது. அவனுடைய வாத்தியார், ''ஐயோ, இந்த வேலையா உனக்கு? நீ படித்துத் தாசில் வேலையே சம்பாதித்திருப்பாயே!'' என்று கண்கள் கலங்கிச் சொன்னார்.

''இருக்கட்டும் ராமசாமி அய்யர்வாள், நான் இவனை முன்னுக்குக் கொண்டு வருகிறேன்'' என்று தாசில்தார் மாசிலாமணி முதலியார் அவரைச் சமாதானப்படுத்தி அனுப்பினார்.

* * *

**ரா**மப்பனைத் தம் வீட்டில் அந்தரங்கச் சேவகனாக வைத்துக் கொண்டு அவனிடம் மிகப் பிரியமாக இருந்து வந்தார். அவனுக்கு இருக்கத் தம் வீட்டுப் பின்புறம் இருந்த ஒரு கொட்டாயைக் கொடுத்தார். சாப்பாடும் தாசில்தார் வீட்டிலேயே நடந்தது.

இப்படிச் சந்தோஷமாக வாழ்க்கை சென்றது. தன் அண்ணனுக்குப் பிதுரார்ஜிதச் சொத்து முழுவதையும் கொடுத்துவிட்டதைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொண்டும் வந்தான் ராமப்பன்.

**க**ப்பண்ணன் மகன் ஐந்து வயதுப் பையன், குப்பு, அடிக்கடி ''சின்னையா, சின்னையா'' என்று பவானிக்கு வந்து ராமப்பனுடன் இரண்டு நாட்கள், மூன்று நாட்கள் இருந்துவிட்டுப் போவான். அவனுக்குச் சிற்றப்பனிடம் மிகப் பிரியம். இது அவன் தாயாருக்குப் பிடிக்கவில்லை. ஆனாலும் கப்பண்ணன் இதைத் தடுக்கவில்லை. அவனே பையனை ராமப்பனிடம் கொண்டு வந்து விட்டுப் போவான்.

''ஏதாவது மருந்து வைத்துவிட்டிருப்பான். அதனால்தான் இப்படிப் பையன் 'சின்னையா, சின்னையா' என்று அவ்விடம் ஓடுகிறான். இது அபாயம். ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் விஷம் வைத்து என் குடும்பத்தைக் கெடுத்தாலும் கெடுப்பான். எங்கள் பேரில் அவனுக்குள்ள துவேஷத்தைத் தீர்த்துக் கொள்வான்'' என்று கப்பண்ணன் மனைவி காளியப்பன்புதூர் மாமியிடம் சொல்லுவாள். அவளும் ''அப்படித்தான் ஆகும். இதற்கு என்ன செய்ய? இந்தக் கப்பண்ணனுக்கும் புத்தியே இல்லை. எல்லாரும் தன்னைப் போலவே அப்பாவி என்று எண்ணுகிறான்'' என்பாள்.

* * *

''**சி**ன்னையா! சின்னையா! பாம்பு கடித்துவிட்டது'' என்று கூச்சலிட்டான் குப்பு. புழக்கடையில் விளையாடிக்கொண்டிருந்தவன் இப்படிக் கூச்சலிட்டதும் ராமப்பன் ஓடிப் போய்ப் பார்த்தான். பாம்பையும் அது படம் எடுத்துப் போவதையும் கண்டான். பாம்பு பாழியில் போய்ப் புகுந்து கொண்டது. பயந்துபோன குப்புவைத் தூக்கி எடுத்துப் பாம்பு கடித்த இடத்துக்கு மேல் கயிற்றை இறுக்கிக் கட்டிவிட்டுக் கடித்த இடத்தில் ராமப்பன் தன் வாயை வைத்து இரத்தத்தை நன்றாக உறிஞ்சித் துப்பினான். இது அவன் எங்கேயோ படித்திருந்த படிப்பு.

பையனைத் தாசில்தார் உடனே ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார். அவனுக்கு ஒன்றும் சேதமில்லை. சுகமாகிவிட்டது. ஆனால் ராமப்பனுக்கு ஏதோ வியாதி கண்டது. டாக்டர் அவன் வாயில் புண் இருந்ததாகவும், பாம்பு கடித்த விஷத்தை அவன் உறிஞ்சியபடியால் இந்தக் கோளாறு என்றும் சொன்னார்.

ராமப்பன் ஒரு மாதம் கஷ்டப்பட்டான். சொஸ்தமாகவில்லை. அவனைச் சேலம் ஆஸ்பத்திரிக்குச் சிகிச்சைக்கு அனுப்பினார்கள்.

''நான் சொன்னேனே இல்லையோ? பாம்பாவது, தேளாவது? எல்லாம்

ஏதோ வஞ்சனை'' என்றாள் சுப்பண்ணன் மனைவி.

''சும்மா இரு, பேத்தாதே!'' என்றான் சுப்பண்ணன். ''ராமப்பன் விஷத்தை உறிஞ்சிப் பையனைக் காப்பாற்றினான். இப்போது அவன் நோய் வாய்ப்பட்டுக் கஷ்டப்படுகிறான்.''

''இந்தப் பையன் அந்த இடத்துக்கு ஏன் போக வேண்டும்? எல்லாம் அதனாலேதான் ஆயிற்று'' என்று சுப்பண்ணன் மனைவி விஷயத்தை விடாமல் தொடர்ந்து பேசினாள்.

சுப்பண்ணன் தன் கோபத்தைப் பொறுத்துக் கொண்டு மனைவியின் பேச்சைக் கவனிக்காமல் தன் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சேலத்தில் தம்பி ரொம்பச் சங்கடப்படுகிறான், பிழைப்பது கஷ்டம் என்று சமாசாரம் வந்ததன் மேல் சுப்பண்ணன் சேலம் சென்றான்.

''தம்பி, உனக்கு நான் செய்தது மகா பாவம். என்னை மன்னிப்பாயா?'' என்றான் சுப்பண்ணன்.

''அண்ணா! நீ ஒரு பாவமும் எனக்குச் செய்யவில்லை. குப்பு சுகமாக இருக்கிறானா?'' என்றான் ராமப்பன். சுப்பண்ணன் அழுதான்.

''அண்ணா அழாதே! பெண்கள் செய்த காரியம். அதற்கு நீ பொறுப்பு இல்லை. அந்தச் சின்னக் காட்டை வைத்துக்கொண்டு நாம் இருவரும் என்ன செய்திருக்க முடியும்? வீணாக மனம் நொந்து கொள்ள வேண்டாம். நான் பிழைப்பது சந்தேகம். என் பணம் எஜமான் தாசில்தாரிடம் கிட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய் இருக்கிறது. பாங்கியில் போட்டிருக்கிறார். நான் பிழைத்தாலும் சரி, உயிர் போனாலும் சரி, அது குப்புவின் சொத்து'' என்று சொன்னான்.

தாசில்தாரும் அப்போது இரண்டு நாள் லீவு எடுத்துக் கொண்டு ராமப்பனைப் பார்க்க வந்திருந்தார். ராமப்பன் அண்ணனிடம் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

''ராமாயணம் பழைய சரித்திரம். ஆனால் இப்போதும் ராமனும் பரதனும் போல் நம் நாட்டில் சிலர் இருக்கிறார்கள் என்பதைக் கண்டோம்'' என்றார் தாசில்தார், பக்கத்திலிருந்த டாக்டர் சாமிநாதய்யரிடம்!

## குமாரி ரம்யாவின் ரஞ்சக நடனம்

சென்ற அக்டோபர் மாதம் மயிலை பைன் ஆர்ட்ஸ் அரங்கத்தில் நடைபெற்ற குமாரி ரம்யாவின் நடனங்களில், முதல் முறை மேடைத் தோற்றம் என்றாலும், உழைப்பின் உயர்வைக் காண முடிந்தது. நிருத்தப் பகுதியில் தன்யாசி வர்ணம் சேர்க்கப்பட்டிருந்ததைக் குறிப்பிட வேண்டுவதைப் போலவே நடனச் சிறப்பையும் சொல்ல வேண்டும். தானக் கட்டும், அடவு வகைகளும் ரஞ்சகமாக இருந்தன. வசந்தா ஜதிஸ்வரம் கவர்ச்சிகரமாக அமைந்திருந்தது. சங்கீதப் பற்றுள்ள குடும்பத்தைச் சேர்ந்த குமாரி ரம்யாவின் நிகழ்ச்சியில் பக்தியைப் பிரதானமாகக் கொண்ட கீர்த்தனைகள் சேர்க்கப்பட்டிருந்ததால் அபிநயப் பகுதி ரஞ்சகமாக இருந்தது. ஸ்வாமிமலை எஸ். கே. ராஜரத்தினத்தின் நட்டுவாங்கமும், ஸ்ரீமதி சுமித்ரா ரத்னம், ஸ்ரீமதி ஸரளா பஞ்சாபகேசன் ஆகியோரின் மதுர கீதமும், நடனத்துக்குச் சிறப்பு அளித்தன. தொடர்ந்து அப்பியசித்து வந்தால், குமாரி ரம்யாவின் பரதக்கலை மேலும் அபிவிருத்தியடையும் என்று எதிர்பார்க்கலாம்.



# எதிர்காலம் எடுத்துரைக்கும் ஏந்தல்



அந்தணரில் நனிசிறந்த அந்தணாளன்
அவன் ஆற்றல் அருளறிவு உலகம் ஓதும்
தொண்ணூற்று மூன்றாண்டு தொடர்ந்தும் இன்னும்
தொண்டாலே இளமைமிகப் பெற்று வாழ்வோன்;
பன்னூறு பிரச்சினைகள் மூளைத்திட்டாலும்
பகுத்தறிந்து விரித்துரைக்குந் திறனாய்வாளன்;
'என்னே! இவன் கூர்த்தமதி?' என வியக்க,
எதிர்காலம் எடுத்துரைக்கும் ஏந்தல்! வாழி!

அரசாட்சி புரிந்ததிலோ இவரைப்போல
ஆளுமை யுடையோராய் இருந்தோர் யாரே?
பொருளாட்சி புரியாத மக்கள் வாழ்வில்
பொன்னான வாய்ப்புகள் பலவுண்டாக்கித்
தெருளாதோர் புரிகின்ற தில்லுமல்லைத்
தெளிவாக்கி அவர் தம்மைத் திருத்தஞ்செய்து
அருளாட்சி புரிவதற்கே வழிவகுத்து
ஆக்கமெலாம் அளித்திட்ட திறலோய்! வாழி!

'நல்லான்சக்கரவர்த்தி' நன்மரபில் வந்தோன்
நாடறிய நற்பணிகள் பலபுரிந்தோன்
பொல்லாத பேர்களையே பொதுவில்கண்டால்
புறங்காணுமாறு விரட்டி யோட்டவல்லோன்
கல்லாருங் கேட்டுணர்ந்து கொள்ளுமாறு
கனிவாக எளிதாகப் பேசுங்கோமான்
எல்லோரும் ஏற்குமொரு தருமங்களை
இடையறா துழைக்கின்ற அறவோன் வாழி!

இராஜாஜி போலேயொரு இராஜதந்திரி
எவருண்டு இந்தியத் துணைக்கண்டத்தில்?
தராதலத்தில் இவர்க்கிணையாச் சொல்லுதற்குத்
தக்கமதி யூகியை நான் கண்டதில்லை;
பராவுகின்ற பாரதமாம் பெரிய நாட்டில்
பேரறிஞர் வகிக்காத பதவியுண்டோ?
'இராம ராம!' வெனும்நாமஞ் சொன்ன வேடன்
இராமகதை தமிழில்தந்தோன் வாழி! வாழி!

— நாரண துரைக்கண்ணன்




இந்தியா
காவல் நாய்க்கு மயக்க மருந்து கொடுத்தும் பிரயோஜனம் படாது போலிருக்கே? இந்த போலீஸ்காரன் இருக்கும் வரை நம் ஜம்பம் சாயாது!
கம்யூனிஸ்ட்களுக்கு அவர் போலீஸ்!


தமிழர்களைக் கபளீகரம் பண்ணுவது சாத்தியமில்லை போலிருக்கே!
திமுக
தமிழர்களுக்கு அவர் தளபதி!


சர்வாதிகாரி போல் நடந்து கொண்டும் என்ன பிரயோஜனம்? சித்த நிம்மதியா இருக்க விடாமே கனவிலே கூட வந்து கர்ஜிக்கிறாரே!
இந்திராவுக்கு அவர் சிம்ம சொப்பனம்!




தி.மு.கவுக்கு அவர் டாக்டர்!




சுதந்திரா வுக்கு அவர் கண்ணன்!




உலகத் தலைவர் களுக்கு அவர் உபாத்தி யாயர்!

# 1972 நெருங்கிவிட்டது!

உ. உ. உ. உ.

(பாரத நாட்டின் ஏதோ ஒரு ராஜ்யத்தின் முதல் மந்திரியும், இன்னொரு மந்திரியும்.)

**முதல் மந்திரி:** என்ன நண்பரே! 1972க்கு இன்னும் ஒரு வருடம்தானே இருக்கிறது! நாம் ஒன்றும் ஏற்பாடு செய்யாமல் இருக்கிறோமே!

**மந்திரி:** ஓ! 1972 தேர்தலைப் பற்றிச் சொல்கிறீர்களா! அதற்கு ஏற்பாடு செய்யாமல் இருப்பேனா! போன தடவை எதிர்க் கட்சியில் மிகப் பிரமாதமாக வேலை செய்த ஒருவரை நம் கட்சியில் வேலை செய்ய அழைத்திருக்கிறேன்.

**மு. மந்.:** ஆமாம், போன தேர்தலின்போது நம் கட்சியின் வெற்றிக்காக ஒருவர் வெகு நன்றாகப் பிரசாரம் செய்தாரே, அவர் விஷயம் என்ன ஆச்சு?

**மந்:** அவருக்குத்தான் நீங்கள் ஒரு மந்திரி வேலையும் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டீர்களே!

**மு. மந்:** நான் எவ்வளவுதான் மந்திரி சபையை விஸ்தரிப்பது?

**மந்:** நான்தான் மந்திரி சபையை விஸ்தரிக்க ஒரு புதிய திட்டம் கொண்டு வந்தேனே! நீங்கள் அதைக் கவனிக்கவேயில்லே!

**மு. மந்:** ஆமாம், என்ன திட்டம் கொண்டு வந்தீர்கள்?

**மந்:** ஒவ்வொரு துறைக்கும் குறைந்தது ஆறு மந்திரிகளாவது இருக்க வேண்டும் என்று சொன்னேன்.

**மு. மந்:** எதற்காக ஆறு மந்திரிகள்?

**மந்:** எதற்காகவா! காரியாலயத்தில் உட்கார்ந்து பைல்களைப் பார்க்க ஒருவர், வீட்டைத் தேடிக் கொண்டு வருகிறவர்களுக்குப் பேட்டியளிக்க ஒருவர், காரியாலயத்தைத் தேடிக் கொண்டு வருகிறவர்களுக்குப் பேட்டியளிக்க ஒருவர், மாலை வேளைகளில் நாடகங்களுக்குத் தலைமை வகிக்க ஒருவர், வெளியூர்களில் திறப்பு விழாக்களில் கலந்து கொள்ள ஒருவர், வெளிநாடுகளில் இதே இலாகாவை எப்படி நிர்வகிக்கிறார்கள் என்று சுற்றிப் பார்த்துத் தெரிந்து கொள்ள ஒருவர் ஆக ஆறு மந்திரிகளாவது இருக்க வேண்டும் என்று சொன்னேன்.

**மு. மந்:** ஆம், இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது. இந்தத் திட்டத்தை நான் ஏன் நிராகரித்தேன், தெரியுமா?

**மந்:** எதற்காக நிராகரித்தீர்கள்?

**மு. மந்:** முதல் மந்திரியும் ஆறு பேர் இருக்க வேண்டும் என்று பைத்தியக்காரத்தனமாகக் குறிப்



நாடோடி

பிட்டிருந்தீர்கள். அதனால்தான் நிராகரித்தேன். சரி, அது போகட்டும். நீங்கள் ஏதோ தேர்தல் பிரசாரகர் என்று குறிப்பிட்டீர்களே, அவர் பேச்சில் கெட்டிக்காரரா, மக்களைத் தம் வசப்படுத்துவதில் சாமர்த்தியசாலியா?

**மந்:** இதோ அவரே வருகிறார். கேளுங்களேன் !

(தேர்தல் பிரசாரகர் வருகிறார்)

**மு. மந்:** வரவேண்டும், தேர்தல் பிரசாரகரே! நீங்கள் எங்க கட்சியில் சேர்ந்ததில் சந்தோஷம். எங்க கொள்கைகள் தங்களுக்குப் பிடித்து விட்டன என்று நினைக்கிறேன்.

**தேர்தல் பிரசாரகர்:** அதுதான் இல்லை. கொள்கைக்காகக் கட்சி சேருவதோ, அல்லது கட்சி மாறுவதோ பத்தாம் பசலி வழக்கம். இப்பொழுதெல்லாம், பதவி என்ன கிடைக்கும் என்பதைக் கொண்டுதான் கட்சி சேருவதோ அல்லது கட்சி மாறுவதோ 'பாஷன்'.

**மு. மந்:** சரி, நீங்கள் என்ன சலுகை எதிர்பார்க்கிறீர்கள்?

**தே. பிர:** சலுகை எதிர்பார்க்கவில்லை, பதவி எதிர்பார்க்கிறேன். ஆனால் அது தங்களிடம் கிடைக்குமா, சந்தேகம்...!

**மு. மந்:** ஏன் ?

**தே. பிர:** போன தடவை தங்களுக்கு வெற்றி வாங்கிக் கொடுத்த பிரசாரகருக்கு மந்திரிப் பதவி கொடுக்காமல் ஏமாற்றி விட்டீர்களே !

**மு. மந்:** அவருக்கு மந்திரிப் பதவி கொடுக்க முடியவில்லை, ஆனால் சலுகைகள் கொடுக்கிறேன் என்றேனே !

**தே. பிர :** நீங்கள் என்ன சலுகைகள் கொடுக்கிறது! மந்திரியாகச் செய்துவிட்டால், எனக்கு வேண்டிய சலுகைகளை நானே எடுத்துக் கொள்கிறேன்.

**மு. மந்:** சரி, சுற்றி வளைத்துப் பேசுவானேன்? உமக்கு மந்திரிப் பதவி வேண்டும்; அவ்வளவுதானே !

**தே. பிர:** அவ்வளவுதான்.

**மு. மந்:** சரி, உமக்கு மந்திரிப் பதவி கொடுக்கிறேன். (மந்திரியைப் பார்த்து) இந்தாரும் நண்பரே ! நம் அரசு இதுவரையில் சாதித்த காரியங்களைப் பற்றிய ஜாபிதாவை இவரிடம் கொடும். இவர் அதைப் பிரசாரம் செய்யட்டும்.

**தே. பிர:** உங்களுடைய சாதனைகள் தேவையில்லை. உங்களுக்கு எதிராக நிற்கப் போகிறவர்கள் யார், அவர்களுடைய சொந்த வாழ்க்கை எப்படி என்பதுதான் முக்கியம்.

**மு. மந்:** எதற்காக ?

**தே. பிர:** ஏனெனில், 'வாழ்க' என்றுசொல்வதைவிட, ''ஒழிக'' என்று சொல்வதில்தான் பிரசார சக்தி அதிகம். ''இன்னின்ன சாதனைகள் புரிந்த இன்னார் வாழ்க! அவருக்கு வோட்டுப் போடுங்கள்'' என்று சொல்வதைவிட, ''இன்னின்ன அக்கிரமங்கள் புரிந்த இன்னார் ஒழிக ! அவருக்கு வோட்டுப் போடாதீர்கள்!'' என்று சொல்வதில்தான் வேகம் அதிகம். மக்களும் நல்லதைவிட, கெடுதலைத்தான் அதிகம் நம்புவார்கள்.

**மு. மந்:** ஆக, எங்கள் கட்சிக்கு வோட்டுப் போடு என்று சொல்ல மாட்டீர்கள் !

**தே. பிர:** சொல்லவே மாட்டேன். ஆனால் எதிர்க் கட்சிக்கு வோட்டுப் போடாதீர்கள் என்று சொல்வேன்.







'தமிழ் அரசு' 5-11-1970 இதழில் ஒரு சிறு அறிக்கை கண்டேன். தலைவர் ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தபோது சென்னை மாநகராட்சிக்கு ரூ. 1000 நன்கொடை வழங்கி அத்தொகையிலிருந்து கண் பார்வையில் குறை இருக்கும் ஏழைக் குழந்தைகளுக்கு மூக்குக் கண்ணாடி வாங்கித்தர உபயோகப்படுத்தும்படி கேட்டுக் கொண்டதாகவும், அத்தொகையை அவர் விருப்பப்படியே இத்தனை ஆண்டுகளாகக் கண்பார்வை குறையுள்ள பல குழந்தைகளுக்குக் கண்ணாடி வாங்க உபயோகித்து வந்ததாகவும் இப்போது அந்தத் தொகை முழுதும் தீர்ந்துவிட்ட நிலையில் இருப்பதால் இந்த நல்ல காரியத்துக்கு மேலும் மக்கள் நன்கொடை அளிக்கும்படியும் கூறுகிறது.

இவ்வறிக்கையைப் படித்தபோது இதனுடன் சம்பந்தப்பட்ட தலைவர் ராஜாஜியின் இளமைக்கால உருக்கமான நிலை என் மனத்தில் எழுந்தது. திரு டி. க. கலிய பெருமாள் எழுதியுள்ள "நாட்டுக்கு நல்லவர் - ராஜாஜி" என்ற நூலில் வரும் அப்பகுதி வருமாறு: 'அவருக்கு வயது ஐந்து நடந்து கொண்டிருந்தது. பள்ளியில் சேர்ந்த பிறகு அவர் தமக்கு இருந்த ஒரு குறையை உணர்ந்தார். அது என்ன குறை தெரியுமா? அவருக்குக் கிட்டத்துப் பார்வை.

ஆசிரியர் கரும் பலகையில் எழுதுவது ராஜாஜிக்குத் தெரியவில்லை. ராஜாஜி மனம் வருந்தினார். தமக்கும் பார்வையில் இருந்த குறையை ராஜாஜி தம் தந்தையிடம் கூறினார்; மூக்குக் கண்ணாடி வாங்கித் தரும்படி வேண்டினார்.

தந்தையாரோ அதற்குச் சம்மதிக்கவில்லை. ஏன் தெரியுமா? 'வயதானவர்களுக்குத்தான் மூக்குக் கண்ணாடி தேவைப்படும். சிறுவர்களுக்கு எதற்கு?' என்று அந்தக் காலத்துப் பெரியவர்கள் எண்ணி வந்தார்கள்.

பன்னிரண்டாவது வயதில் அவர் மெட்ரிகுலேஷன் பரீட்சை எழுதினார். அந்தச் சமயத்தில்தான் அவருடைய தந்தை ராஜாஜிக்கு மூக்குக் கண்ணாடி வாங்கிக் கொடுத்தார். அப்போதுதான் உலகத்தை அவரால் முதன் முதலாகத் தெளிவாகப் பார்க்க முடிந்தது!

தம்மைப்போல் பல சிறுவர்கள் கஷ்டப்படுவார்களே என்ற எண்ணம் ராஜாஜியை எவ்வளவு வருத்திக் கொண்டிருக்க வேண்டும் என்பதை அவர் குறிப்பாக இந்தக் காரியத்துக்கு வழங்கியுள்ள நன்கொடையிலிருந்து நாம் அறிய முடிகிறது.

- வி. ஏ. வாசுதேவன்



மு. மங்: எதிர்க்கட்சியில் யார், யார் நிற்கப் போகிறார்கள் என்று இப்பொழுதே எப்படிக் கண்டுபிடிப்பது?

தே. பிர: இதில் என்ன கஷ்டம் இருக்கிறது! வருமான வரி அதிகாரிகள் யார், யார் வருமானத்தைப் பதுக்கி வைத்திருப்பதாகச் சந்தேகப்படுகிறார்கள் என்பதை நாசூக்காக விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டியது. அதையெல்லாம் நிச்சயமாக அவர்கள் தேர்தலில் செலவழிப்பார்கள் என்று வைத்துக் கொண்டு அவர்களைப் பற்றிய வாழ்க்கை ரகசியங்களை அம்பலப்படுத்தலாம்.

மு. மங்: அவர்களைப் பற்றிய உண்மை விவரங்கள் நமக்குக் கிடைக்காவிட்டால்?

தே. பிர: அதைப் பற்றிக் கவலையில்லை. அங்குதான் நம் கற்பனையைப் பயன்படுத்த வேண்டும். "குழந்தையை அடி. அடித்த காரணம் உனக்குத் தெரியாமல் இருக்கலாம்! ஆனால் அது குழந்தைக்குத் தெரியும்" என்று வேடிக்கையாகச் சொல்வார்கள். அதைப் போல, நாம் சுமத்தும் எந்தப் பழியும் எதிராளிக்குப் பொருத்தமாகவே அமைந்து விடலாம். ஆமாம், இன்னொரு காரியம் நீங்கள் செய்ய வேண்டும்.

மு. மங்: என்ன?

தே. பிர: 1972 ஆரம்பத்தில் பல தொழிற்சாலைகளில் வேலைநிறுத்தம் நடக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

மு. மங்: எதற்காக?

தே. பிர: அப்பொழுதுதான் பூசல்களைத் தீர்த்து வைக்கிறேன் என்று சொல்லி, நீங்கள் தொழிலாளிகளின் வாக்குகளைப் பெறலாம்.

மு. மங்: ஆனால், இதனால், நாம் தொழிலாளிகளின் பக்கம்தான் இருக்கிறோம் என்று தெரிந்து கொண்டு, முதலாளிகள் தேர்தலுக்குப் பணம் கொடுக்க மாட்டார்களே!

தே. பிர: என்ன இது! இதெல்லாம் நான் உங்களுக்குச் சொல்லித் தர வேண்டுமா, என்ன? "பணம் கொடுக்கப் போகிறீர்களா, அல்லது தொழிலாளிகளை வேலை நிறுத்தம் செய்யச் சொல்லவா?" என்று அவர்களைப் பயமுறுத்த வேண்டியதுதானே? பயமுறுத்தி, இவர்களிடமிருந்து பணத்தை வாங்க வேண்டியது. பிறகு, தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்யச் சொல்ல வேண்டியது, அவ்வளவுதானே!

மு. மங்: ஏது ரொம்பக் கெட்டிக்காரராய் இருக்கிறீரே!

தே. பிர: அப்போ, பிரசாரகர் வேலையும் பின்னால் மந்திரி பதவியும் நிச்சயம் தருவீரென்கிறீர்களா?

மு. மங்: அதுதான் இல்லை! இத்தனை விஷயங்கள் தெரிந்துவைத்திருக்கும் உம்மைக் கிட்டத்தில் நெருங்க விடுவதே ஆபத்து! நீர் என்னையே கவிழ்த்துவிட்டு முதல்மந்திரியாகி விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!.... ஆகவே போய் வாரும்; நமக்குள் சம்பந்தம் வேண்டாம்!



# சுதந்திரக்கட்சியின் அடிப்படைக் கொள்கைகள்

(பம்பாயில் 1959ம் ஆண்டு ஆகஸ்டு 1, 2 தேதிகளில் நடைபெற்ற அகில இந்திய சுதந்திரக் கட்சி மகாநாட்டில் கீழ்க்கண்ட கொள்கைகள் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டன.)

1. சுதந்திரக் கட்சி ஜாதி, மதம், தொழில், அரசியல் சார்பு ஆகிய எவ்வித வித்தியாசமும் பாராட்டாமல் எல்லா மக்களுக்கும் நீதியும், சமமான வேலை வாய்ப்புக்களும் அளிக்க உறுதி எடுத்துக் கொள்ளுகிறது.

2. மக்களின் முன்னேற்றம், க்ஷேமம், சந்தோஷம் யாவும் தனிமனிதனின் ஊக்கம் உற்சாகம், முயற்சியையே பொறுத்திருக்கின்றன என்று இக்கட்சி கருதுகிறது. இக்கட்சி தனி மனிதனின் அதிகபட்ச சுதந்திரத்துக்கும் சர்க்காரின் குறைந்தபட்ச தலையீட்டுக்கும் பாடுபட உறுதி கொண்டிருக்கிறது. ஆனால் சமுதாயத்தில் பலவீனமாக உள்ளவர்கள் மற்றவர்களால் இன்னல்களுக்கு ஆளாகும்போது, அவற்றைத் தடுக்கவும், பாதுகாப்பு அளிக்கவும் சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறது என்பதையும் அங்கீகரித்தே மேற்கண்ட முடிவுக்கு வந்திருக்கிறது. அத்துடன், தனி நபர்களின் முயற்சிகள், பலனளிக்கக் கூடிய சூழ்நிலையைச் சர்க்கார் உருவாக்க வேண்டும் என்றும் கருதுகிறது. ஆகவே, தற்போதைய அரசாங்கம் கடைப்பிடித்து வரும் சர்க்கார் தலையீட்டுக் கொள்கையை இக்கட்சி எதிர்க்கிறது.

3. மக்களிடை தார்மீகப் பண்பு உள்ளது. பிறருக்கு உதவ வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு இயல்பாகவே இருக்கிறது. அதில் திருப்தியும், பெருமையும் அடைகின்றனர். இப்பண்பு நம் மக்களிடையே பாரம்பரியமாக வந்தது. இந்த அரிய பண்பை வளர்த்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதற்குப் பதில் தேர்தலில் வோட்டுக்களின் பலத்தின் மூலம் பதவிக்கு வந்துள்ள அரசாங்கம் மக்களிடையே நம்பிக்கையின்றி, அவர்களைப் பலாத்காரப்படுத்தும் சட்டதிட்டங்களை இயற்றி அவர்களை அரசாங்க அதிகார வர்க்கத்தின் கீழ் பிடிபடும் அடிமைகளாக்கி விடுகின்றது. அதனால் இக்கட்சி மேற்கண்ட அரசியல் முறையை எதிர்த்து, காந்தி மகானால் கூறப்பட்ட தர்மகர்த்தா முறையை ஆதரிக்கிறது.

4. மக்களிடம் நம்பிக்கை வைத்துச் சர்க்கார் சட்டங்கள் இயற்ற வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது. அப்படியின்றி சர்க்கார் தன் அதிகாரத்தில் நம்பிக்கை கொண்டு, ஒரு வர்க்கத்தாருக்கும் இன்னொரு வர்க்கத்தாருக்கும் இடையில் பூசலையும் பொறாமையையும் வளர்த்தல், சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், ஒப்பந்தங்களை அலட்சியப்படுத்துதல், தனிமனிதர்களின் உரிமைகளையும் சுதந்திரங்களையும் பறித்து விட்டுச் சர்க்கார் அதிகாரிகளுக்கு அதிகமான அதிகாரங்கள் வழங்குதல் ஆகிய காரியங்கள் செய்வதை இக்கட்சி எதிர்க்கிறது.

5. நமது பண்பாட்டில் என்ன நல்ல அம்சங்கள் உண்டோ அவற்றைக் காப்பாற்றவும், தார்மீகப் பண்பை வளர்க்கவும் நிலைநாட்டவும் எல்லாவித முயற்சிகளும் எடுக்க இந்தக் கட்சி பாடுபடும். வாழ்க்கையின் பண்பு, சிறப்பு எப்படியிருக்க வேண்டும் என்பதைக் கருத்தில் கொள்ளாமல், 'வாழ்க்கைத் தரம் உயர வேண்டும்' என்று சொல்லி வெறும் லோகாயதக் கொள்கைக்கே முக்கியத்துவம் அளிக்கும் திட்டங்களை ஒதுக்கவும் இக்கட்சி உறுதி கொள்கிறது.

6. இன்றைய சர்க்கார் கடைப்பிடித்து வரும் கொள்கையின் காரணமாக, எங்கும் ஸ்திரமற்ற தன்மை நிலவுவதாலும், இனி மேல் கடைப்பிடிக்கப் போவதாகச் சொல்லும் பலவித கொள்கைகளின் காரணமாகவும், நிலத்தில், ஆலைகளில், கப்பல்களில் வேலை

செய்யும் எல்லா மக்களிடையேயும் ஊக்கமும் உற்சாகமும் வறண்டு விட்டன. பரவலாகக் காணப்படும் இந்த நிச்சயமற்ற தன்மையைப் போக்க முயற்சிகள் எடுக்க வேண்டும் என்று இந்தக் கட்சி உறுதியாக நம்புகிறது. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் சொத்து, வியாபாரம், தொழில் சம்பந்தமாக அளித்துள்ள உரிமைகளைக் காப்பாற்றுவதன் மூலமும், பொது நலனைக் கருதிச் சர்க்கார் எடுத்துக் கொள்ள நேரும் சொத்துக்களுக்கு நியாயமான நஷ்டஈடு கொடுப்பதன் மூலமும், தனி நபர்கள் தொழில் துறையில் ஈடுபட உற்சாகமும் ஊக்கமும் பெறுவார்கள் என்று இந்தக் கட்சி உறுதியாக நம்புகிறது.

7. தேசிய வளர்ச்சிக்காக வகுக்கப்படும் திட்டங்களில் மக்களின் அடிப்படைத் தேவையான உணவு, நீர், வீடு, உடை ஆகியவற்றுக்கு முதன்மையிடம் அளிக்கப்பட வேண்டும் என்று இந்தக் கட்சி கருதுகிறது.

8. ஒவ்வொரு பிரஜைக்கும் தனது குழந்தைகளுக்குத் தன் விருப்பப்படி, அரசாங்க உத்தரவுகளால் கட்டுப்படுத்தப்படாத சுதந்திரச் சூழ்நிலையில் கல்வியறிவு புகட்ட உரிமையுண்டு என்று இக்கட்சி நம்புகிறது: அத்தகைய கல்வி, வேறு எவ்வித பாகுபாடுமின்றிச் சர்க்கார் அளிக்க வசதி செய்து தர வேண்டும் என்றும் நம்புகிறது.

9. இன்றைய முக்கியமான தேவை அதிக உணவு உற்பத்தி என்பதை இக்கட்சி அங்கீகரிக்கிறது. தாமே ஆண்டும் உழைத்து வரும் நிலச் சொந்தக்காரர்கள் தங்கள் நிலத்திலிருந்து அதிக விளைச்சலைக் காண்பதில் அக்கறை கொண்டுள்ளார்கள். அவர்கள் மூலமாகத்தான் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று இக்கட்சி கருதுகிறது.

உற்பத்தியைப் பெருக்குவதற்குக் கிராம வாழ்க்கையின் சௌஜன்யத்தைக் கெடுக்காத வகையில் முயற்சிகள் எடுத்துக் கொள்ள வேண்டும். அவர்களிடையே மனமாற்றத்தை உண்டாக்கி, பொருளுதவியும் அளித்துத் தீவிர விவசாய முறைகளைக் கடைப்பிடிக்கச் செய்ய வேண்டும். இன்றுள்ள நில உரிமையிலோ, விவசாய மேற்பார்வையிலோ எத்தகைய மாற்றமும் செய்யக் கூடாது என்றும் கட்சி கருதுகிறது.

நீர்ப்பாசன வசதி, உர உதவி, கருவிகள் உதவி, கடனுதவி, வியாபார உதவி ஆகியவை இன்று அளிக்கப்படுவதைவிட, இன்னும் நல்ல பயன் அளிக்கும் வகையில் கொடுக்கத் திட்டம் வகுக்க வேண்டும் என்றும் இக்கட்சி கருதுகிறது.

விவசாயத்துக்கு எல்லாவித உதவியும் அளிப்பதில் இக்கட்சி நம்பிக்கை கொண்டிருக்கிறது. ஆனால் தனி நபரின் நில உரிமையை வெறும் காகித உரிமைக்குக் கொண்டு வந்து, பலபேர் ஏனோதானோ என்று உரிமை கொண்டாடச் செய்து, அதன் காரணமாக விவசாயியையும் அவன் குடும்பத்தினரையும் விவசாயத்திலேயே உற்சாகம் இழக்கச் செய்து, விளைவைக் குறைத்து, சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் மேற்பார்வைக்கு விவசாயத்தை விடக்கூடிய கூட்டுப் பண்ணை முறையை இக்கட்சி பலமாக எதிர்க்கிறது. கிராமப் பொருளாதாரத்தை அதிகார வர்க்க மேற்பார்வைக்கும் கூட்டுப் பண்ணைக்கும் விடுவதைக் கடுமையாக எதிர்க்கிறது.

கிராம மக்களின் தேவைகளுக்குப் போதிய கவனம் செலுத்தப்படவில்லை என்ற குறை கிராம மக்களிடையே இருப்பதை இக்கட்சி உணர்கிறது. அவர்கள் வாழ்க்கை நிலை உயர வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது. இன்றுள்ள அவர்கள் வாழ்க்கை நிலையைவிட, அவர்கள் வாழ்க்கைத்தரம் உயர இடையூறாக உள்ளவற்றை அகற்ற எல்லா முயற்சிகளும் எடுக்க வேண்டும். முக்கியமாக மற்றப் பொருள்களின் விலைகளுக்குத் தகுந்தபடி உணவு தானியங்களின் விலைகளையும் நியாயமான நிலையில் நிறுத்த முயற்சிகள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று இந்தக் கட்சி கருதுகிறது.

10. தொழில் துறையில் பொருள் உற்பத்தி பெருகுவதற்கும் தொழில்கள் விஸ்தரிப்பதற்கும் வர்த்தகப் போட்டி முறையிலேயே போதிய ஊக்கம் அடங்கியிருக்கிறது என்று கருதுகிறது. தொழிலாளர் நலனைப் பாதுகாப்பதற்கும் கொள்ளை லாபம், அதிக விலை ஏற்றம், பங்குகள் மீது அதிக லாபம் வழங்குவது ஆகிய தீமைகளை ஒடுக்குவதற்கும் போட்டி முறை அனுஷ்டிக்க முடியாத தொழில்களிலும் சர்க்கார் தலையிட்டுத் தக்க பாதுகாப்புகள் அளிக்க வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது.

தனி நபர்கள் நடத்தும் தொழில்களுக்கு உதவும்படியாகவும், அவசியமாகவும் உள்ள கனரகத் தொழில்களை மட்டுமே சர்க்கார் மேற்கொள்ள வேண்டும். அதாவது, தனி நபர்களால் நடத்த முடியாத தொழில்களையும், ரயில்வேக்கள் போன்றவற்றையுமே சர்க்கார் ஏற்று நடத்த வேண்டும்.

சர்க்கார் வர்த்தகத் துறையில் நுழைவதையும் சுயேச்சையாக நடைபெறும் விநியோக முறைகளைக் கெடுப்பதையும் இக்கட்சி எதிர்க்கிறது. கன்ட்ரோல்கள் கொண்டு வருவதையும் உத்தியோகஸ்தர்கள் வியாபாரத்தை நடத்துவதையும் இவற்றின் காரணமாக ஊழலும் பண விரயமும் ஏற்படுவதையும் எதிர்க்கிறது.

தொழில் துறையில் உற்பத்தியாளர், தங்கள் வாடிக்கைக்காரர்களுக்குத் திருப்தி அளிக்கும் வகையில் வேலை செய்யவும், உபயோகிப்போர், தங்களுக்கு விருப்பமான உற்பத்தியாளரிடம் போகவும் பூரண சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்பது இக்கட்சியின் மிக முக்கியமான அடிப்படைக் கொள்கையாகும்.

11. இன்றைய சர்க்கார் எல்லாத் தொழில்களையும் அரசாங்கமே மேற்கொள்ள வேண்டும் என்றதொரு கொள்கையைக் கடைப்பிடித்து வருவதால் சுதந்திரமாகத் தொழில் செய்து பிழைக்கும் கிராமத் தொழிலாளர்களும், கலைஞர்களும், சிறு வியாபாரிகளும் தங்கள் ஜீவனத்தை இழக்கும்படியான பேராபத்தில் இருக்கிறார்கள். ஆதலால் இக்கட்சி கிராமத் தொழிலாளர்கள், கலைஞர்கள், சிறு வியாபாரிகள் இவர்களின் தொழில் சுதந்திரத்தைக் காப்பாற்ற உறுதி பூணுகிறது. இவர்கள் மிகவும் விரிவான முறையில், அதிக

# பப்ளிக் ப்ராவிடண்ட் ஃபண்டின் மூலம்

# 5%

வரியில்லாத வட்டி

# பெறுங்கள்




- கடன் பணம் எடுக்கும் வசதிகள்
- இந்நிதியிலுள்ள டெபாசிட் தொகையை கோர்ட் மூலம் அட்டாச் செய்ய முடியாது
- இதிலுள்ள டெபாசிட் தொகை வரிக்குட்படும் வருமானத் தொகையிலிருந்து நீக்கம் பெறும்.

விவரங்களுக்கு ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவை அணுகுங்கள்.

தேசிய சேமிப்பு நிறுவனம் 

davp 70/372

[illegible]மல் மக்களுக்கு அருந்தொண்டாற்றி வருகிறார்கள். அத்தொழில்களை இல்லாமல் செய்து விடுவது தேசத்துக்குப் பெரிய நஷ்டமாகும். அதுமட்டுமின்றி இன்றைய சர்க்கார் அத்தொழில்கள் செய்து வந்தவர்களையெல்லாம், வேலை யில்லாமல் திண்டாடும் கோஷ்டியுடன் சேர்த்து, வேலை யில்லாத் திண்டாட்டப் பிரச்னையைப் பெரிய பிரச்னையாக்கிவிடும் என்று இந்தக் கட்சி கருதுகிறது.

12. இக்கட்சி சர்க்கார் செலவு விஷயத்தில் சிக்கனம் கடைப்பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறது. கிராம, நகர மக்களின் நியாயமான வாழ்வைப் பாதிக்காத வகையில் வரித் திட்டம் அமைய வேண்டும் என்று இக் கட்சி கருதுகிறது. அதே சமயம் சர்க்கார் நிர்வாகத்துக்கும், சர்க்கார் நடத்தும் சமூக நலப் பணி, பொருளாதாரத் துறைப் பணி ஆகியவற்றுக்கும் தேவைப்படும் அளவுக்கு வரி விதிக்க வேண்டியதுதான் என்று அங்கீகரித்தாலும், தனி நபர்கள் தொழில்களில் முதலீடு செய்ய முடியாதபடியும், பொதுமக்களிடம் மூலதனம் சேர முடியாதபடியும் கடுமையான வரிகள் போடக் கூடாது என்று இக்கட்சி கருதுகிறது.

13. இக்கட்சி கடுமையான வரித் திட்டங்களின் மீது நிர்மாணிக்கப்படும் முன்னேற்றத் திட்டங்களையும், மிதமிஞ்சிய பற்றாக்குறை பட்ஜெட் சமர்ப்பிப்பதையும், தேசத்தின் கடன் அடைக்கும் சக்திக்கு மிஞ்சி வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்குவதையும் எதிர்க்கிறது.

14. பணவீக்கம் உண்டாக்கும் முறைகளையும், சேமித்த பணம், முதலீடு செய்த பணம், நிரந்தரமாகக் குறிப்பிட்ட வருமானம் தரும் சொத்து ஆகியவற்றின் மதிப்பைக் குறைக்கும் படியாகவும் விலைவாசிகள் உயரும்படியாகவும் உள்ள காரியங்களை இக்கட்சி எதிர்க்கிறது. மேற்கூறிய காரியங்கள் எதிர்காலத்தில் ஏதோ ஒரு நாள் லாபம் உண்டாக்கலாம் என்ற நம்பிக்கையின் மீது செய்வதாகும். ஆனால் இன்றைய மக்களுக்குத் தாங்க முடியாத இன்னல்களை விளைவித்து வருவதாகும். அதனால் இக்காரியங்களை இக்கட்சி எதிர்க்கிறது.

15. இக்கட்சி சர்க்காரின் நிர்வாகச் செலவைக் கணிசமாகக் குறைக்க வேண்டும் என்று கருதுகிறது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடையே திறமையையும், ஒழுக்கத்தையும் வளர்க்க வேண்டும் என்று கருதுகிறது. தனி மனிதர்களும், தனி மனிதர்களின் ஸ்தாபனங்களும் திறமையாகச் செய்யக்கூடிய காரியங்களைச் சர்க்கார் அதிகாரிகளைச் செய்யச் சொல்வதையும், அதற்காக உத்தியோகஸ்தர்களையும், அதிகாரிகளையும் அதிகமாக நியமிப்பதையும் இக்கட்சி கண்டிக்கிறது. இப்படி அதிகார வர்க்கத்தை விரிவுபடுத்துவது தேசத்தின் செல்வத்தைப் பயனில்லாத வழியில் செலவழித்து வீணடிப்பதாகும்.

16. தேவைப்படுகிற சமயங்களில் சமுதாய விரோதச் செயல்களைத் தடுப்பதற்கும் அதற்குக் காரணமானவர்களைத் தண்டிப்பதற்கும் மட்டுமே போதுமான அளவுக்கு அரசாங்கம் தன்னிடம் அதிகாரத்தை வைத்துக் கொண்டு, தேசமெங்கும் தொழில்கள் [illegible]யாகத் தோன்றி முன்னேறுவதற்கு வசதிகள் அளிப்பதன் மூலம்தான், சர்க்கார் தேசத்துக்கு உருப்படியான சேவை செய்ய முடியும் என்று இக்கட்சி கருதுகிறது.

17. இக்கட்சி வாழ்க்கையில் எல்லாத் துறைகளில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் நிரந்தரமான முழு நேர வேலை வாய்ப்புகள் ஏற்படுத்தித் தர உறுதி பூண்டிருக்கிறது. தேசிய செல்வத்தை வளர்க்கும் வகையிலும், வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்கும் வகையிலும் எல்லாவித தொழில்களும் வளர்ச்சி அடைய வேண்டும், அதற்கான திட்டம் வகுக்க வேண்டும் என்று கருதுகிறது. நாட்டில் கனரகத்தொழில்கள், மக்கள் வாங்கி உபயோகிக்கும் சில்லறைச் சாமான்களைத் தயாரிக்கும் தொழில்கள், கிராம மக்களின் விவசாய வருமானத்தில் ஏற்படும் பற்றாக் குறையை இட்டு நிரப்பி, விவசாய வேலைக்கு உதவும்படியாக இருக்கும் கிராமக் கைத் தொழில்கள் இவை யாவும் ஒன்றை யொன்று விழுங்காத வண்ணம் வளர்ச்சி பெற வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது.

18. இக்கட்சி வயலில், ஆலைகளில், கடைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் -- சிப்பந்திகளுக்கு நியாயமான ஊதியம் கிடைக்க வேண்டும் என்ற கொள்கை உடையது. உற்பத்திக்குத் தகுந்தபடி ஊதியம் பெருக வேண்டும்; அதனால் தொழிலாளர்கள் ஒன்றுசேர்ந்து சங்கம் அமைத்துத் தங்கள் உரிமைகளைக் கேட்டுப் பெற உரிமையுண்டு என்று இக்கட்சி கருதுகிறது. முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இடையே தகராறுகள் ஏற்பட்டால் இருபாலரிடையே நல்லுறவை ஏற்படுத்த இக்கட்சி உறுதி கொள்கிறது.

19. எவ்வித பாகுபாடும் பாராமல் நியாயமாகவும் யோக்கியமாகவும் வேலை செய்யும் அதிகாரிகள் தங்கள் கடமையிலிருந்து வழுவி வேலை செய்யும் வகையில் அரசியல் செல்வாக்கை நிர்வாகத் துறையில் புகுத்துவதை இக்கட்சி எதிர்க்கிறது.

சட்டபூர்வமான ஆட்சியை நிலைநிறுத்தவும், சுதந்திரமான நீதிமன்றத்தை நிலைநாட்டுவதுமே இக்கட்சியின் நோக்கம். நமது நீதிமன்றங்கள் அரசியல் நிர்ணயச் சட்டம் அவற்றுக்கு அளித்துள்ள பூரண அதிகாரங்களைச் செலுத்தி வேலை செய்ய வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது.

20. இக்கட்சி எல்லா முக்கியமான விஷயங்களிலும், காந்தி மகானின் உபதேசங்களை மனத்தில் கொண்டு நடக்கும். பொதுமக்களிடமும், சத்தியத்திலும், அஹிம்சையிலும் பூரண நம்பிக்கை வைத்து இயங்கும்.

21. கட்சியின் அடிப்படைக் கொள்கைகளைத் தவிர்த்து, மற்ற விஷயங்களில் அங்கத்தினர்களுக்கு அபிப்பிராய சுதந்திரத்தை ஒவ்வோர் அரசியல் கட்சியும் வழங்கினால் ஜனநாயகத்துக்கு நல்ல சேவை செய்ததாகும் என்று இக்கட்சி கருதுகிறது. ஆகவே, மேலே குறிப்பிட்ட கொள்கைகளுக்குப் புறம்பான எல்லா விஷயங்களிலும் சுதந்திரக் கட்சி தனது அங்கத்தினர்களுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கிறது.

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!






உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினால் குறைந்த விலை

<u>வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...</u>

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

<u>தாய் சேய் இருவரின் தேகநலம்...</u>

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச் சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

---

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

davp /0/67

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon